**Rao Sahib S. VAIYAPURI PILLAI, B.A., B.L.,**
*Reader in Tamil, University of Madras.*

*To*

*The Manager,*
OTTRUMAI OFFICE,
*Theagarayanagar, Madras.*

MADRAS,
*17th October '40.*

Dear Sir,

Kindly accept my thanks for the two books you have been good enough to send me. The author, Mr. N. S. Kandiah Pillai has taken considerable pains in the preparation of the works.

Tamil-akam gives a collection of views of the many scholars who have written on the history of the Tamil country. It is no doubt a convenience to have the several views on the subject compiled in a single book.

Tamilar charitram (History of the Tamils) is more ambitious in its scope. It deals with the antiquity of the human race and takes the reader down to the age of Cilappadhikaram. It discusses briefly the relationship of the Sumerian and the Indus valley civilisation with the Dravidian civilisation. The Tamilian Society, their polity, their religion and their Literature are all briefly reviewed.

In such a vast undertaking, there is room for slips and we should be chary of criticising the author. There is also considerable room for sharp difference of opinion. But taking the book as a whole, I should say it is a useful publication.

*Yours sincerely,*

(Sd.) S. VAIYAPURI PILLAI.

# அகநானூறு வசனம்

## நித்திலக் கோவை



ஆக்கியோன் :

யாழ்ப்பாணத்து நவாலியூர்

திரு. ந. சி. கந்தையா பிள்ளை.

(தமிழகம், தமிழூர் சரித்திரம், பத்துப்பாட்டு வசனம், பரிபாடல், வசனம் கலிங்கத்துப்பரணி வசனம், பதிற்றுப் பத்து வசனம, முதலியவும் பிறவுமாகிய பல நூல்களின் ஆசிரியர்.)

ஒற்றுமை ஆபீஸ்,
தியாகராயநகர், மதறாஸ்.

 1941 [விலை அ. 12

## அச்சாகும் நூல்கள்.

1. சங்கநூல் அகராதி

   (சங்ககால இலக்கியங்களிலும் தொல்காப்பியத்திலும் உள்ள சொற்கள் மாத்திரம்.)

2. சங்க நூலாராய்ச்சி

   (எட்டுத்தொகை பத்துப்பாட்டு என்பவற்றைப் பற்றித் தனித்தனி ஆராய்ச்சி உரைகள்)

# அகநானூறு வசனம்

## மூன்றாவது

* நித்திலக்கோவை

[இது வேறுபட்ட தலைமகள் வற்புறுக்குந் தோழிக்குச் சொல்லியது.]

வற்கடகாலம்போல வாடி வருந்தித் துயர்மிகும் படி நினைந்து வருந்தலை சிறிது ஆறியிருப்பேம் என்றாய் தோழி! கூத்தர், கூலியாகக் கிடைத்த சிறிய உணவை மீதியின்றி எஞ்சாது உண்பர்; உண்டு நீரில் வாழும் முதலையின் உடம்புபோல மூங்கிலால் வேய்ந்த, குடிசையின் வாயில்போன்ற வண்டியின் சில்லு என்னும்படி (ஓர் இடத்தில் தங்காது திரியும்) இடையூறிலலாத வாழ்க்கையர். அவர்கள் சுரம் தம்மை வருத்த மரத்தைத் தறித்து பெரிய தெளிந்த ஓசையுடைய கிணைப்பறையைச் செய்வர். அக்கிணைப் பறை ஒலிக்க, ஆட்வர் அழகிய குவிந்த கொத்துகளுடைய எருக்கம் பூவை நெருங்க வைத்துக் கட்டிய மாலையைத் தலையிற் சூடுவர். பெண்கள், தாமரை மலர்போன்ற நெருப்பின், முழங்குகின்ற ஒளிபோன்ற, காட்டு ஆவிரையின் விளங்குகின்ற பூமாலையை அழகிய மார்பிடத்தே, அழகிய முலைகள்

---

* "இவை செய்யுளும பொருளும ஒக்குமாகலின்" பெற்ற பெயர்.

மீது அசையும்படி அணிவர் ; செறிந்த நடையுடைய பெண் யானையோடு களிற்றி யானை புணர்ந்தது போன்ற குறியவும் நெடியவும் எக்காளம் என்னும் குழல்களோடு, முழவு வாத்தியம் சேர்ந்து ஒலிக்கும். கார்காலவான முழக்கத்தைப்போல நீரிடத்தே ஒலிக்கும் தேரையின் ஒலி போலத் தாள அறுதியுடன் சில்லரி என்னும் வாத்தியம் ஒலிக்கும். அவ்வாறு சிறிய பல வாத்தியங்களோடு பல ஊர்கள்தோறும் திரிந்து ஆடிச் செல்வார்கள். அவர்கள் ஒல் எனும் ஓசை உண்டாக வாத்தியத்தை வைத்து தலைப்பைக் கூட்டிக் கட்டிய வாத்தியப் பைகளுடையவர்களா யிருப்பர். இவர்கள் விட்டுச் சென்ற மன்றத்தைக் காணின், அடுத்த நாள், ஆரவாரமுடைய ஊருக்கு இனிமை இல்லாதாகும். அதுபோல துன்பத்தைச் செய்து மாலைப்பொழுது வந்தது. அதனுல் காதலர் செய்த காதலை இப்பொழுது நெடுநேரம் மறந்திருக்க முடியுமோ ? —**அதியன் விண்ணத்தனுர்.**

## 302 குறிஞ்சி

[இது, பகலே சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.]

மலைச்சாரலிடத்தே வளர்ந்த வாழையின் சிவந்த முகமுடைய அழகிய பூ, அசைகின்ற காற்று வீசுந் தோறும் நித்திரை கொள்ளும் யானையின் பெரிய முதுகைத் தடவும். இவ் வகையான அழகிய நாட்டை யுடையவனேடு நீ, நீரூற்றுகளில் புனலாடியும், பல இதழ் உடைய குவளை மலர்களைப் பெரிய சுனை களிடத்துப் பறித்தும், நாறுகின்ற பூக்களுடைய

வேங்கை மரத்தில் வண்டுக் கூட்டங்கள் ஒலிக்கின்ற தும், வாசம் கமழ்கின்றதுமாகிய சோலையிடத்து மகிழ்ந்து விளையாடுதல் இனி அருமைபோலும். அனபுடைய தோழி! பெரிய மலைச் சாரலிடத்தே எங்கள் தமையன்மார் உழுது பயிரிட்ட கரும்புபோல் அழகு பெற்ற பெரிய கதிருடைய தினை கிளிகள் விழும்படியாக விளைந்தது. மிகவும் அழகு தேமல் பரந்ததும், நிரம்ப விம்மியதுமாகிய இளம் முலைகளை யும், மெல்லிய வாய்த்தழைத்து வளரும் கூந்தலையும் பலமுறையும் நோக்கும் ஆயானவள், அதனை (தினை விளைந்ததை) அறிந்தும், அதனைக் காவல் காக்க நம்மைச் செல்லுங்கள் என விடமாட்டாள்போல் இருக்கின்றாள்.

—**மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்.**

## 303 பாலை

[இது, பிரிவின்கண் வேட்கை மீதூர்ந்த தலைமகள் தன் னெஞ்சிற்குச் சொல்லியது.]

எமது நோயைப் பிறர் அறிவதை அஞ்சிக் களவொழுக்கத்தை மறைததுப், பேய் கண்ட கனவைப் போல (பேய் கனவு கண்டால் பிறர்க்குக் கூறமாட் டாது) பல மாட்சிமைப்பட்ட நுண்ணிய காம முடையேனாயினேன. அக் காமம், வெற்றிவேலும், வீரம் மிகுந்த சேனையும், பசிய பொன்னாபரணமும் உடைய **பொறையனது**, முகில் செருக்கி எழுந்து தங்கு வதும், தெய்வப் பெண்கள் உறைவதுமாகிய பெரிய **கொல்லி மலை** யுச்சியில் நெருங்கி ஓடும் அருவி ஓசை போல, அலரை எழச் செய்தது. இவ்வாறு அலரெழப்

பிரிந்து சென்றவர், பாடிக்கொண்டு இரவலர் சென்ருல், மலையை ஒத்த யானையோடு நல்ல ஆபரணங்களைக் கொடுக்கின்ற பாரியின் பறம்பு மலையில், நிரையாகப் பறக்குங் குருவிக் கூட்டங்கள், காலையிற் சென்று, வளைந்த முதுகையுடைய செந்நெற் கதிரைப் பெற்று, எல்லாம் இரை தேடும் கருத்துடையனவாகிப், பொழுது படத் (தனித்தவரைத்) துன்பஞ் செய்யும் மாலைக் காலத்துத் திரும்பி வருவனபோல, வருவாரென்று நினைந்தேன. இவ்வாறு நினைந்த அறியாமையுடைய நெஞ்சே! நீயோ சந்தேகந் தெளியாயாயினை. யானோ பல உலர்ந்த மரங்களுடையதும், உமணர்விடும் கீழ்க்கை ஓசை மாட்டுக் கூட்டங்களின் மணி ஓசைபோல ஒலிபபதுமாகிய சுர வழியைக் கடந்து, வறறிய நீரிடத்துள்ள மீன் சென்றதுபோல அவர் சென்ற வழியிடத்தே செலலுதலை விரும்பினேன், —ஔவையார்.

## 304 முல்லை

[இது, பாசறைக் கட்டலை மகன் தன் னெஞ்சிற்குச் சொல்லியது.]

பெரிய வானத்தில் உயர்ந்த கூட்டமாகிய கரிய மேகம், நீர் நிறைந்த நுங்கின கணகள் சிந்தியவற்றைப்போல, நடுங்கும் குளிர்போன்ற நுண்ணிய ஆலங்கட்டியோடு, பெரிய மழைத்துளிகளையுடைய தாய் வானத்தே உறுமிப், பெரிய பகலைச் செய்யும் வைகறைக் காலத்தே, வெள்ளிய மழையைப் பெய்யும். கையினுற் செய்து விட்டதுபோன்ற செம்பாட்டு நிலத்தில், சிறிய குட்டியைத் தழுவிய

தெறித்து நடக்கும இளம் பெண் மான், வலமாக முறுகிய கொம்புடைய பெரிய ஆண் மானேடு, நிறைத்து விட்டாற்போன்ற தெளிந்த நீரைப் பருகும். பருகி, அசைகின்ற கிளைகளுடைய குருந்தின் ஒடுங்கிய நிழலில் தங்கும். வண்டுகள் ஆரவாரித்து ஊதுதலின் பிடவம பூக்களின் முறுக்கவிழும். பொறி களையுடைய மயில்கள் ஆடும். வரியுடைய மண லிடத்தே காயாவின் பழம்பூப்பரந்து கிடக்க அதன் மேல் தம்பலப் பூச்சிகள் வரியாகக் கிடந்து நீல மணி யிடத்தே பவளத்தை வைத்ததுபோல அழகு செய் யும். நீரினல் இவ்வாறு அழகு பெற்ற கார்காலத்தே, எனது வருத்தத்தை அறியாத என் காதலி, உயர்நத கொம்பையுடைய யானையுடைய அரசனது பாசறை யிடத்தே, அவன் வினையோடு வேறு தேயத்தில் தங்கி, எமககு அருளாதவர், நம்மை மறப்பவராகார் என்று, என்ன நினைந்து வருந்துவாளோ ?

—இடைக்காடனர்.

## 305 பாலை

[இது, பிரிவுணர்த்தப்பட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

பகற் காலத்தும் நீங்காது, யாமத்தே குறைவில் லாத மழையோடு ஐயென்று இராக் கழியுமாறு துளி யுடைய மேசும் பெய்யும். அப்பொழுது குளிர்ந்து வருகின்ற வாடைக் காற்ருேடு குளிர் மிகும். இவ்வகை யான வருத்தஞ் செய்யும் நடு இரவில, பல மெத்தை களால் உயர்ந்த செல்வமுடைய படுக்கையிடத்தே, பருகுதல்போன்ற காதலோடு திருகி, உடம்பிடத்தே புகுதல்போன்ற கைகளினுற் றழுவும் முயக்கத்தை

விரும்புகின்ற பெண்கள் வருந்துவார்கள், அருளில்லாத கணவர் பொருள் காரணமாகப் பிரிந்தவிடத்து. அத்துன்பத்தைத் தாங்கிய வருந்தும் நெஞ்சோடு யான் ஏன் இருக்கிறேன்? தோழி! பெரிய அரையுடைய பனை யிற்றங்கும், கூர்ந்த வாயையுடைய ஒரு தனித்த அன்றிலின் வருந்திய குரல் கலக்க, உள்ளே சுடுகின்ற உள்ளம் ஒல்லென நெருங்கிய நெருப்புப் பிறக்குமபடி மூச்சு விடும், (பிரிவை) நினையாதவர்களின் இனிய குழலோசையைக் கேட்டு.

—வடம வண்ணக்கன் பேரிசாத்தனர்.

## 306 மருதம்

[இது, தோழி தலைமகற்கு வாயின்மறுத்தது.]

பெரிய புகழுடைய தலைவ! நில்லாது செல்வீராக. பரந்த பொய்கையிடத்தே பிரம்போடு வளர்ந்த முட்கொம்புகளையுடைய இண்டங் கொடியின் சிம்புகளையுடைய தலை, புதிய பூ ஈன்ற மாமரத்தின் இளந்தளிரைத் தடவ அதனிடத்தே அழகிய பட்சிகள் உறங்கும். இவ்வகையான நீர் சூழ்ந்த செழித்த வயல்களிடத்தே வளர்ந்த கரும்பின் சாய்ந்த பக்கங்களில் ஊர்ந்து சென்று, வயலாமை, பசிய வெயிற் காயும். இவ் வகையான நெல்லுடைய வீதிகளையுடைய நல்ல ஊரனே! உனது, அழகு மாட்சிமைப்பட்டவளும், சந்திரனை ஒத்த நெற்றியுடையவளும், விளங்குகின்ற ஆபரணமுடையவளுமாகிய ஒரு பரத்தை இகழ்ந்த சொலலும், அச் சொற்களைச் சொல்லிச் சிவந்த வாயிதழும் உடையவளாய், குளிர்ந்த கண்களால் வருத்தஞ் செய்யும்படி பார்த்

துக், குளிர்ந்த வாசம் மிக்க மாலையால் அடித்து உம்மோடு ஊடினுள் ; சிறிது கோபஞ் செய்து எமது மணல் மிகுந்த வீதியிடத்தே குறுகினுள்.

—மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனுர்.

## 307 பாலை

[இது, பிரிவுணர்த்தப்பட்ட தோழி, தலைமகனைச் செலவு விலக்கியது.]

ஐயனே ! சிறிய நெற்றி பொன்னிறங்கொண்டு, பெரிய தோள்கள் சோர்ந்து பெரிய உயர்ந்த அல்குலின் பொறிகள் வாடும்படி இரவும் பகலும் மயக்கமடைந்து, மெல்லிய மழைத்துளிகள் விழுகின்ற மலர்களைப்போலக் கண்ணிடத்தே நீர்வடிய இவ்விடத்து இவள் வருந்துவாள் என்று கருதாது வினையை விரும்பி நீங்குதல் தகுதியோ ?

வேங்கையின் வெல்லும் வலியைத் தொலைத்த பெரிய நல்ல யானை, கரிய மத நீராற் செருக்கி, மதம் மிகுதலின் செல்வோரைக் கோபிக்கும். இவ் வகையான வருத்தம் தரும காட்டிடத்தே பெரிய கையுடைய கரடிக் கூட்டங்கள் இருந்து புறரும் பழஞ்சோற்றை உண்ணும். கறையான் புற்றின் சுவருக்குப் பக்கத்தே பற்றை வளர்ந்துள்ள மன்றத்தே கடவுள் போகிய க ரி ய காலுடைய தூணிடத்து (கந்து), முன் கூட இருந்தமையின் விட்டுப் பிரிய மாட்டாது கரிய புறு, பேட்டோடு இருந்து குறு குறுக்கும். இவ்வகை கையான பெரிய கல்லுடைய மலையிடத்தது நீர் செல்லும் வழி.

—மதுரை ஈழத்துப் பூதனுர்.

## 308 குறிஞ்சி

[இது, இரவு வருவானைப் பகல் வருகென்றது.]

புலியோடு போர் செய்த வாடிய நடையுடைய யானை, நீண்ட பிளந்த பெரிய புண்ணைக் கழுவுதற்கு இராக்காலத்தே, முகில், ஆலங்கட்டியோடு பெரிய மழை பெய்தது. அதனால் விடியற்காலையில் மிக வெள்ளிய அருவி நீர் மிக ஓடுதலின் விளங்குகின்ற மலை மறையும். (மழை பெய்த) வெள்ளிய முகில்கள் பரந்து மட்பாத்திரங்களைச் சூளையிடும் புகைபோல் தோன்றும். இவ் வகையாக மலை நாடனே! நீர் இரவில் வருதல் ஏனோ? பகல வந்தால், வேலை எப்பொழுதும் வைத்திருப்பவனும், கொடையில் மகிழுபவனுமாகிய எங்கள தந்தையின், களிறு கடந்து வர முடியாத கல்முகை யிடத்துக்கட்டிய பரணிடத்து இருந்து சிறிய தினையில் விழும் கிளிகளை எம்மோடு ஓட்டி, வளமுடைய மலைச்சாரலில் ஊற்றுடைய சுனையிடத்துள்ள குவளையின் தேன் ஒழுகுகின்ற அழகிய வாசமுடைய பல பூக்களைச் சூடிய, மெல்லிய கூந்தலாகிய மெத்தை யிடத்தே உறங்குதல் முடியும். பொழுதுபட காவலருக்கு மறைநது காவலுடைய புனத்தைை ஆராய்ந்து பெரிய ஆண் யானைபோலக், கரிய கோலுடைய குறிஞ்சியுடைய, நீர் வாழும் ஊருக்குச் செல்லுவீர்.

—பிசிராந்தையார்.

## 309 பாலை

[இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு, வேறுபட்ட தோழிக்குத் தலைமகள் சொலலியது.]

வலிய வாளால் வெட்டியும் வில்லினால் எய்தும் பகைவரை ஓட்டிப்பாற் பசுக்களாக கொண்டு வந்த அஞ்சா நெஞ்சராகிய வீரா அமபைத தூரததே வைத்து வலியநிலத்தே வருவார்கள். தெய்வம் உறை கின்ற பரிய அரையுடைய வேம்பின் கீழ் நிணம எறிந்து இரத்தம் தூவி புலாலாகிய பலவகைப்பட்ட இறைச்சி யின் புழுக்கை உண்பர். அவர்கள் இவ்வாறுண்ட அகன்ற பெரிய பாறையிடத்து களிறு முதுகை உரைஞ்சிய இலவமரம் நிற்கும. அதன் விதை களோடு கூடிய வெண்பஞ்சு ஆலங்கட்டிபோலப் பறக்கும். இவ் வகையான காடு மிகவும் நெடியது என்னாது, கூத்தர், பெரிய குதிரைப் படையையும், நல்ல போரையுமுடைய வானவனது அழகிய வீரக் கழலணிந்த சிவந்த பாதங்களை விரும்பிச் செல்வார் கள். தோழி! மூங்கிலின் அழகிய குழாய் வெடித்துக் கவணின் விசையுடன் சென்று பெரிய இடியோசை யை யுண்டாக்கும் மிக்க வெயில் நேரத்துச் செலல முடியாது, இராக்காலத்தே புனத்தை மேய்ந்த வலிய கோபமுள்ள யானை, குளிர்ந்த பெரும் பற்றையைப் பார்த்து அஞ்சும. இவ் வகையான குன்று குறுக்கே கிடக்கும் வழியிடத்த அவர் சென்ற நாட்டே நாம் செல்லின் என்னோ? —கருவூர்க் கந்தப்பிள்ளை சாத்தனார்.

## 310 நெய்தல்

[இது, தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி சொல்லி யது.]

கடிதாகச் செல்லும் தேருடன் இளையரை விட்டு வந்து நிற்கும் பெருந்தகையே! நீ சிறந்த குண

முடையை யல்லாமல் தொழத் தகுந்த அழகினையு முடையை. நீ வருத்தம் மிகுதலின் பல நாட்கள் வந்து பணிந்த மொழிகளைக் கூறினாய். அதனால் குவளை மலர் போன்ற கண்கள் கலங்க உன்மாட்டு இவளும் பெரு மையல் கொணடாள். தாயுடைய பெரிய மனையிடததே சுறறத்தார் பாராட்ட அன்போடு வளர்ந்த பெண் இவள், ஆதலின் அவள் பெரிதும் அறியாமை யுடையுடையள். குன்றைப்போலத் தோன்றும் மணற்கும்பங்களையுடைய கடற்கரையை உடையவனே! இன்று இவ்விடத்தே வரவிரும்பாதிர். அப் பூ விரிகின்ற புன்னை மீது தோன்றும் பனைக்கு அப்பால, உமணர் உப்பு ஏற்றிச் செல்லும் வண்டிகளோடு வந்த இளைத்த குரங்கு பயந்து ஓட ஒலித்தெழுந்து இடியை ஒத்த திரை உடைகின்ற சிறிய வேலியிடத்தது, எமது சிறிய ஊராகும். ஆதலின் சிறிது அவ்விடத்திற் செல்வீராக. —**நக்கீரனார்.**

## 311 பாலை

[இது, பிரிவின் கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.]

பெரிய பெண் யானைகளைப் பரிசிலாகப் பெறும் பாணர்போல வாயிலில் நின்று, அரிய கடிய காவலை யுடைய பெரிய வீட்டின் ஒரு புறத்தில், சித்திரம் எழுதினாற்போன்ற திணணிய கதவை, பேய் உலாவுகினற நடுச்சாமத்தில், காவலர் உறங்கும் நேரம் பார்த்துத், திறந்து நம்மைப் புணர்ந்தார். அவர், நம்மிலும் சிறந்தவர்கள் இந்த உலகத்தில் இல்லை யெனக் கூறிப் பல நாள் எனது பொங்கிய கூந்தலைக் காதலோடு

தடவினர். அவர், நீர் வறண்டு திசைகளெல்லாம் வெம்ப, வழியிடத்தே வருகின்ற புதியவர்களுக்கு, இடையர், இளைய காளைகளிடத்துக் கட்டிய மூங்கிற் குழாய்களிடத்திருக்கும இனிய புளியைக் காதடைப் புத் தீருமபடி தேக்கிலையில பகுந்து கொடுக்கும், புல்லி யின் நலல நாட்டுக்கு அப்பால் நீணட சுரவழியைக் கடந்து ஏகினர். அருண்மொழிகளால தேற்றி நம்மைப் பிரிந்தோர் இவ்வாறு சென்றுராயினும் நீடித்துத் தங்கார். —மாமூலனர்.

## 312 குறிஞ்சி

[இது, தலைமகன் சிறைப்புறத்தானகத் தோழி சொல் லியது.]

தலைவர் மனம் உடம்படுதலின் உலகியலை நினைந்து அடங்கி, இரவில் வருதலாகிய இடும்பை நீங்க வரையக் கருதுவார். அவ் வாருயின் யாம் பெரிதும் மகிழ்வோம்; மகிழ்ந்து, உயர்ந்த மலையி லிருந்து பெரிய பெயலுக்கு ஒழுகும் பெரிய நீரிடத்தே.* காந்தட் செடிகளுடைய, சிறிய குடி யிடத்தவரின் கௌவையைப் பொருட்படுத்தாது, செவ்வரிபடர்ந்த குளிர்ந்த கண்கள் சிவப்ப நாளைக்கு, அப்பெரிய மலைநாடன் மார்பே தெப்பமாகக் கொண்டு ஆடுவோம். அன்புடைய தோழி! வருகின்றுயோ? மூங்கில் வளர்ந்திருக்கும் மலைச்சாரல் மறையும்படி (முகில) கால்கொண்டு, இனிய முரசின் ஓசைபோல முழங்கிப், பகைவர் ஓடும்படி புறங்கண்ட, தாளளவு நீண்ட பெரிய கையையும், வெல்கின்ற போரையு

---

* நீரிடத்தே ஆடுவோம் என முடிக்குக.

முடைய பாண்டியனது போரிடத்து உயர்த்திய இரத்தந் தோய்ந்த புகழப்படும் வேல்போலக் கொடி விட்டு மின்னி மழை பரக்கின்றது.

—மதுரை மருதனிளநாகனர்.

## 313 பாலை

[இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.]

இனி அஞ்சத்தக்கது என்ன இருக்கின்றது' அஞ்சாதிருப்பாயென மிக அழகிய மலைச்சார லிடத்தே வந்து முயங்கி எனது நெஞ்சைப் பிணித் தார். அவர் சென்ற வழியை நினைந்து தினமும் நீரிற் குளித்துப் பொருகின்ற கயல்மீனைப்போலக் கண் நீர் நிறைய ஐதாக நெடுமூச் செறிகின்றேன் ; எறிந்து இரவும் பகலும் துன்பம் வருத்த வருந்திப் பாம்பு விழுங்கிய சந்திரனைப்போல நெற்றியின் ஒளி மறைந்தது. அவரை யில்லாது யான் இவ் வாறு வருந்த அவர் பொருள் செய்தற்குப் பிரிந்தார். திரவியத்தைக் கொட்டிய பைக்கூறைபோல, பாம்பு உடம்பு வெதும்பும் வற்கடமிகுந்த காட்டிடத்துச் செல்கின்ற புதிய மாக்களின கணையினுல் மடிந்த வர்களது, பிளவுபட்ட புண்ணின் இரத்ததத்தைக் குடித்து, உளவறியச் செல்லும் மனிதரைப்போல ஒடுங்கிய குரலவாய், விலலுச் செல்லும் வழியே செல் லும் காக்கைகளுடையதும் கற்கள் உயர்ந்ததுமாகிய சாரலுடைய மலையைக் கடந்தவர், அருள்புரிந்து வரு வார், தோழி ! வாழ்வாயாக.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

## 314 முல்லை

[இது, வினைமுற்றிப் புகுந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.]

நீலத்தைப்போன்ற நீரைப் பொதிந்து கருக்கொண்டமுகில வானம் அதிரும்படி முழங்கும்; ஆலங்கட்டிபோல நிலம் குளிர்ந்து காடு குழையும் படியும், மாடுகளைத்தேடும் உழவர் இனிய குரலிற் கூப்பிடும்படியும், குட்டியையுடைய இளம் மானைத் தழுவி, முல்லை நிலத்தே, முறுகிய கொம்புடைய ஆண் மான பசியபயிரை உண்ணும்படியும் கார்காலத்தைச் செய்து பெரிய மழை பெய்தது. இக்கார்காலத்தே, அசுவநூலிற் சொல்லியபடி வளைந்த காலையுடைய குதிரையின் கலலென்று ஒலிக்கும் மணி, சத்திககப பாகன், தார் அணிந்த குதிரை பூட்டிய உயர்ந்த தேரைச் செலுத்துவான். அதன இரண்டு சிலலுகளும், செல்லுகின்ற வழியை வெட்டுதலின் இனிய யாழ்நரம் பிறப்பிறக்கும் செவ்வழி என்னும் ஓசை உண்டாகும். இவ்வாறு அவர் வராராயின் என்னிலை என்னகும், பாண, சொல்லுவாயாக, என்று கடவுட் கறபுடைய அவள் பாணனுக்குக் கூறினள். அப்போது செய்வது அறியாது வருந்திய மயக்கந்தரும் நெஞ்சின் துயரைக் கொடுக்கும் வருத்தங் நீங்கும்படி வந்தவனே! இனியதைச் செய்தாய். நின்கண்ணி வாழ்வதாக. வேலியிடத்துச் சுற்றிய வெள்ளைப்பூவுடைய முல்லையின் பெரியமாலை கமழும், புதிதாகத் தழைத்த கூந்தலும் இனிய நகையுமுடையவள் முயங்கும் பொருட்டுப், பெரும! உன் மார்பு மலர் வதாக. —**மதுரை அழக்கர் ஞாழார் மகனார் அம்மள்ளனார்.**

## 315 பாலை

[இது, மகட்போக்கியதாய் சொல்லியது.]

கூந்தலும் சிறிய நெளிவுகொண்டது. முலைகளின் கூரிய மிருதுவான முகம், செப்புகள்போல் முகிழ்த்தன; தோழிப் பெண்களின் துணையை இவள் பெற்றிருக்கின்றாள் எனப் பலமுறை கண்ணுற் பார்த்து நேற்றும் ஐயப்பட்டேன்; அது தான் கழிந்தது. மனம் வேறுபட்டும் அறியாமையினால் அவளை வீட்டில் வைத்துக் காவல் காவேனாயினேன். அவள் பெரிய புகழையுடைய பாண்டியனது மதுரைபோன்ற, தனது அரிய காவலையுடைய பெரிய மனையின் மதிலையும் தாண்டியறியாள். அவ்வகையினள் தொலைவிடத்தே, வறண்ட சுனையிடத்து ஒதுங்கி, புறாக்கள் கோதியுண்ட புல்லிய காயையுடைய நெல்லி, மேல் காற்றுக் குதிர்த்த குவிந்த கண்போன்ற பசிய காய், நூலறுந்து சிந்திய துளைத்த பளிங்கு மணிகளைப்போல வறண்ட நிலத்தே உதிர்ந்துகிடக்கும் வழியிடத்தே, கூரிய வேலையுடைய காதலன் பொய் வார்த்தையைக் கேட்டுச் சென்றாள். அவள், தேக்கின் அகன்ற இலை மூடியிருக்கும் பறைபோன்ற குடில் வீட்டில் இறைச்சிப் புழுக்கை உண்ணும் முற்றத்தையுடைய கானவர் வாழ்கின்ற சிறு குடியிடத்தில தங்குவாளோ?

—குடவாயிற்கீரத்தனார்.

## 316 மருதம்

[இது, தலைமகற்கு வாயில் நேர்ந்த தோழி தலைமகளை நெருங்கிச் சொல்லியது.]

நீராடும் துறையிடத்தே பெரிய மீன் திரியும் ஆழ்ந்த நீரையுடைய பொய்கையிடத்தே, அழகிய ஆம்பல் மலரை மேய்ந்த வளைந்த கொமபுடையதும், குளிர்ந்த ஈரமான முதுகையுடையதுமாகிய முதிய எருமை எருது, அசைகின்ற மிக்க சேற்றிடத்தே உறங்கும்; பொழுதுபடப் பசிய நிணமுடைய பசியவரால் மீன் ஊறுபடும்படி அவ்விடத்தை விட்டுச் சென்று வெள்ளைப் பகன்றைக் கொடியைச் சூடி மூதூரிடத்தே, போர் மிகுந்த மள்ளரைபபோலச் செல்லும். இவ் வகையான மருத நிலத்தையுடையவனது தேர் ஏற்றி வருதலின் வந்த அழகிய ஆபரணங்களை அணிந்த பரத்தையின் மெலிந்த தோள்களை அறிந்த (அலர் தூற்றும்) மகளிர் அலர் தூற்றத் தூற்றப் பரத்தையரிடத்தே செல்லுதலோ இவன் இலன் என நீ யறிவாயாக. நீ அவனுடன் புலத்தல் இயலுமோ? வீட்டிலிருக்கும் மனைவியர் அவ்வாறு புலந்து வாழ்தல் வல்லவர்களே! செல்வம் நீங்க,சிறிய அரிசியைக்கொழித்துச் சமைத்து உண்டு, தனியராகி, இனியமொழியுடைய புதல்வன் வறண்ட முலையைச் சுவைக்கும்படி வாழ்கின்றார் ஆதலைத் தாம் அறிந்தும், (அவ்வாறு வருந்தும் பெண்கள்) அதனை அறியமாட்டார்கள். (அதனை—கணவனோடு புலந்துறைதலை.) —ஓரம்போகியார்.

## 317 பாலை

[இது, தலைமகன் வரவுணர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.]

மேகம், பகற்காலத்தே பாயைப்போன்று பரந்து இருளைப் பரப்பி மழை பெய்யா தொழிதலும், புகை

நிற உருவினதாகிய முன்பனிக்காலம் நீங்கும். அப்பொழுது முருக்குகளில் அரும்பிய குவிந்த முகைகளின் கூரியமுனை, நகைக்கும் முகமுடைய மகளிரின் சிவப்பு ஊட்டிய நகங்களை ஒக்கும். உதிராத முருக்கம் பூவின் பல இதழ்கள் உதிரும்படி வண்டுகள், மலரை உண்ணும் விருப்பினால் பாய்ந்து சிதைத்து அவற்றை உதிரச் செய்யும். அதனால் வண்டுகளின் கன்னங்கள் பொன்னாற் செய்தனபோன்று விளங்கும். வெள்ளியினாற் செய்த அம்பு பாறையிடத்தே முறிந்து விழுவனபோல, ஆரவாரமுடைய வண்டின் கூட்டம் ஊதுந்தோறும் குரவமரத்தின் உயர்ந்த கிளையிலுள்ள மணமுடையபூ கோங்கமலரிடத்து உதிரும். அதனால் ஆரவாரித்தெழும் தும்பியின் தெளிந்த ஓசை, விளரிப் பண்ணை விடுகின்ற நரமபைப்போல இம்மென்று ஒலிக்கும். மான் மகிழ்கின்ற விரும்பத்தகுந்த இளவேனிலின் ஒளியை ஒத்த பூக்களையுடைய ஆச்சா மரத்துக் குயில் செய்யும் ஓசை எமக்குக் கேட்கும் காலத்து வருவேம் என்று அவர் கூறிச் சென்ற பருவம் அவ்விடத்தில் வரவில்லைப்போலும், என்று நினைத்து மெல்லெனப் பார்த்து வருந்தி இருந்தோம். இருந்தேமாக நாம் விரும்பியிருந்த மனம்போல அவர் வந்து நின்றார். காதலர் என்னைத் துறந்தார் என்று முன் யான் சொன்னபொழுது அன்னையும் அறியும்படி வருந்தி நல்ல நெற்றியிடத்தே பசலைநோய் பரந்தது. —வடமோதங்கிழார்.

## 318 குறிஞ்சி

[இது, இரவுக்குறி வந்த தலைமகனை வரவு விலக்கி வரவு கடாயது.]

காட்டிடத்தே மான் செல்லும் பாதையில் யானையும் செல்லும். வானத்தின்மீது இடி பெரிதும் இடிக்கும். பாம்பும் புலியும் அஞ்சத்தக்கதாகவுடையவும், அவை இரவிற் திரிகின்றனவுமாகிய சிறிய வழிகளிடத்தே இராக்காலத்தில் வருகின்றீர். மலையிடத்து அருவி ஒழுகும் ஓசையோடு வண்டுகள், மத்தளத்தோடு சேர்ந்த யாழ் ஓசைபோல இம்மென்று ஒலிக்கும். இவ்வாறு வளம் மிகுந்த பெரிய இடத்தில் நீரையுடைய மலை நாட! நீ மணந்துகொள்ள வேண்டினும அதனைப் பெறுகுவை. இன்று முதலாக வராதீர். வரின் எம்மை வருத்தும் துயரத்தோடு யாம் இவ்விடத்தில் இருக்க, இருளிற் செல்லுமிடத்து, நின் மலையிடத்துள்ள சிறு குடியை அடைந்த பின்பு, நீ வேட்டை நாய்களோடு மூங்கில் வளரும் இடத்துச் சென்று, அந் நாய்களைப் பிரிந்தபின், அந் நாய்கள் சத்தத்தினால் நீ நிற்கும் இடத்தை அறியவேண்டி ஊதுகின்ற கொம்பை ஊதல் வேண்டும.

—கபிலர்.

## 319 பாலை

[இது, செலவுணர்த்திய தலைமகற்குத் தோழி செலவழுங்கச் சொலலியது.]

கரிய நிறவாயையுடைய காக்கை, கரிய பெரிய கிளை விழுது விட்டிருக்கும் ஆலமரத்தின் அசைகின்ற கொம்பர்மீது ஏறி, கொடிய வில்லையுடைய எயினரது குறும்பில் ஆரவாரஞ் செய்யும், கொடுந் தொழிலுடைய ஆறலைப்பாரது வில்லினால் இறந்தவர்களின் பிணத்தைக் கவரும். இவ் வகையான பாழ்பட்ட பெரிய இடத்தே, தெய்வப் பெண்ணின் அழகிய வடி

வும், நுண்ணிதாக ஒடுங்கிய நாரியும், நுண்ணிய மாமை நிறமும், வேங்கையின் பொன்போன்ற புதிய மலரை ஒப்ப, அழகிய, மார்பிடத்தே எழுந்து, அழகு தேமல்படர்ந்த முலையும், வண்டு ஆரவாரஞ் செய்யும் கூந்தலும், பெரிய தோளுமுடைய இவளைப் பிரிந்து செல்லற்கு நினைத்தீராயின், சென்று அரிய பொருளைப் பெறுவீராக! கொய்த தளிரைப்போலத் தாங்குதற்கரிய தன்மையளும், மெல்லிய தன்மையும், இளமையும், மிகவும் பெரிய அன்புமுடையளுமாகிய அவள், பிரிவேம் என்று சொல்லும் உமது எதிரே இறப்பேம் என்னும் பெரிய குணம் எப்போதுமுடையள்.

## 320 நெய்தல்

[இது, பகற்குறிக்கண் வந்த தலைமகனைத் தோழி வரைவு கடாயது.]

உயர்ந்த திரையுடைய கடற்பரப்பில் தூண்டிலிடத்தே கொளுவித்திமிலன் கொண்டு வந்த கடிய கண்ணையுடைய சுறுமீனை, அல்குலிடத்தே தழைகளை உடுத்த செலவத்தையுடைய தங்கைமார், விழாக் கொண்டாடும் வீதியிடததே விலை கூறுவர். இவ்வாறான கடற்கரைச் சோலையிடத்தே சிறு குடிகளையுடைய கடற்கரைத் தலைவ! மலர்போன்ற கண்களையுடைய தோழியின் வருத்தந் தரும் அலர் நீங்கும் பொருட்டு, நீ அருளாது பொய்ப்பினும் பொய்ப்பாயாக. நீண்ட கழியிடத்துத் துழாவிய குறிய காலுடைய அன்னம் அடும்பு நெருங்கிய மண

விடத்தே அழகிய சிறகைக் கோதுவதும், பெரிய புன்னையின் தாதினால் அழகு பெறுவதுமாகிய பெரிய துறையிடத்தே, மணலைப்பிளந்த, தாமரை மொட்டை யுடைய உயர்ந்த தேரில், வண்டற்பாவை அழியும்படி வந்து, நீ அவள் தோளைப் புதிதாக அனுபவித்த போது செய்த சத்தியமும் பொய்யாகுமோ? அது கடலறிந்த சாட்சியாகும.

—மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார்.

## 321 பாலை

[இது, மகட்போக்கிய செவிலி சொலலியது.]

பசித்த யானையின் வாட்டமபோல, வற்றிய சுனையைத் தடவிய கோடைக்காற்றின் தெளிந்த சீழ்க்கைபோன்ற ஓசை, வார்கட்டிய பறை ஓசை போன்று, மலை வெடிப்புகளில் சென்று ஒலிக்கும். மெல்லிய காலுடைய பெண் மான் உண்பதற்கு, அதன் ஆண், குதிரின் கால்போன்ற இருப்பையின் வெள்ளிய பூவை உண்ணாது, வலிய குரலாற் கூப்பிடும். இவ் வகையான தொலைவிடத்தே பெரிய மடியையும, ஒலிக்கின்ற மணியையுமுடைய பசுக் கூட்டங்கள் நீர் பருகும் பொருட்டு, இடையர், விடுநிலததே வெட்டிய நீருடைய துரவில், கன்றையுடைய இளைய யானை, களிறோடு பெருமையுடன் வரும். இவ்வகையான புல்லிய இடமுடைய மன்றத்தையும், அழகிய குடி களையுமுடைய சிறிய ஊரிடத்து அவள் தனது காதல னோடுஒதுங்கி இருக்க வல்லளோ? கணையுடைய அஞ்சாத தறுகண்மையையுடைய காளையோடு முன்னே வருந்தச் சொல்வாளோ? வெயில் பெரிய

வருத்தத்தைச் செய்யுமோ? இவற்றை நினைந்து யான் வருந்துகின்றேன். உள்ளிடும் மணி இட்ட அழகிய தண்டையைக் களைந்து, தாய் அறிதலை யஞ்சி, மூங்கில் உயர்ந்த சாரலுடைய மலையைக் கடந்தாள். (மலையைக் கடந்தவள், ஒதுங்கி யிருப்பாளோ? வருந்திச் செல்வாளோ? அவளை வெயில் வருத்துமோ? இவற்றை நினைந்து யான் வருந்துகின்றேன் என்று சேர்த்துக்கொள்க.) —கயமனர்.

## 322 குறிஞ்சி

[இது. அல்ல குறிப்பட்டுப் போகின்ற தலைமகன் தன் னெஞ்சிற்குச் சொல்லியது.]

விளங்குகின்ற வெயிலைப்போல, நெருங்கப்பரந்து மின்னல் வளைந்தோடி, இருண்ட மழை பொழிந்த பாதி இரவில் அடங்காத காமம் அடுத்து நின்று வருத்துதலின் நெருங்கிய மலையிடத்தே வீழ்ந்தவர் களைப்போல நடுங்கி வருந்த, பாம்படிக்கும் கோலைப் போலத் தனிமையாயிருந்து வருந்துகின்றாயோ? நெஞ்சே! இடியைப் போலச் சத்தமிடும் யானைகள் இடத்தே திரண்டு நிற்கும், வாள் (வெட்டுவது தெரியாது) மயங்குகின்ற போர்க்களத்தையும், விளங்குகின்ற வேலையும், வேகமாகச் செல்லும் தேரையுமுடைய திதியனது. ஓடுகின்ற அருவி நீர் ஒழுகுகின்ற குறுங்காட்டில், பிறையை ஒத்த கொம்பும் தறுகணமயும் உடைய பன்றியின் இறைச்சியை உண்ணப் புலிகள் கூடும் சாரலிலே, பாறையில் வைத்த இனியதேன் கூடுகளைக்குறவர் அறுத்தெடுக்க முயன்றும் முடியாத ஏறுதற்கரிய சிகரமுடையதா

யிருககும் சொல்லுதற்கரிய புகழுடைய அத்தியனது பொதிய மலே. அம்மலேபோலப பெறுதற்கரிய பெருமையுடையளா எம்மை வருத்தியவளாவள்.

—பரணர்.

## 323 பாலே

[இது, பிரிவின் கண் வேறுபட்ட தலேவியைத் தோழி வற்புறுத்தியது.]

இந்த மெல்லிய பெரிய அலரை, இவ்வூரிடத்தே எமக்குச் செய்வோரின் இறுமாப்பாகிய சொல் வாடக் காதலர் வருவாரென்பது மெய்யாவதாக. மிருது வான சிவந்த வலியில்லாத சிறிய உனது அடி கள் நிலத்திற் படுவதை அஞ்சி, மெல்ல வளேந்து ஒதுங்கி அழகுபெற நடந்து காணும்பொருட்டு வருவாயாக. கற்பினுல் மேம்பட்டவளே! பாலா மரங்கள் பலவற்றை மறைத்து மூங்கில் வளர்கின்ற பக்கமலேயிடத்துச் செல்லும் யானேக் கூட்டத்தைப் போல, முகில்கள் வானத்தே விளங்குகின்ற சூரிய னின் ஒளி மழுங்கப பரந்து பாமபின் படம் நசிய இடிக்கும் கடிய இடியேற்ருேடு, ஆலங்கட்டியோடு பொருந்திய மழையைப் பெய்து, உனது கூநதலேப் போல் கருமையுடையதாய்க் கால் கொண்டது.

—புறப்பாட்டுப் பெருங் கொற்றனுர்.

## 324 முல்லே

[இது, விணமுற்றிய தலேமகன் கருத்துணர்ந்து, உழையர் சொல்லியது.]

அழகிய ஆபரணமும் விசாலித்த பெரிய மிருது வான திரண்ட தோளும், மடப்பமான பேச்சு

முடைய பெண், விருந்ினரைப் பெறுவள்போலும் (தன் கணவன் விருந்தாக வருதல்). தளிரின் நிறத்தை யுடைய கிளி இனிதாகப் பொரித்த வளராத குஞ்சின் தூவிபோன்ற, மழைத்தூறலுக்கு வளர்ந்த பசிய பயிருடைய முல்லை நிலக்காட்டில், பறைக்கண் போன்று நிறைந்த சுனைகள் கிடக்கும். அவைகள் தோறும துளியைத் தெறிக்கின்ற குமிழிகள் துள்ளு வன போலச் சேற்றுடன் பொருகின்ற தாமரைக் கொட்டைகள் கிடக்கும். அவை மறையும்படி காற்று தாமரைப்பூவின் மகரந்தத்தை உதிர்க்கும். அதனுல் வாசம் கொண்டனவாய் மீன்கொத்திப் பறவையின் சிறகுபோலக் கரிய கண்ணிடத்து வரி யைப் பெற்ற வண்டுகள் நறிய தாமரைப்பூவை உண் ணும். அப் பூக்களை அறுதத சில்லுகள் குளிர்ந்த நிலப்பக்கத்திற பிளந்த வழியுள், பெருந்தகையின் உயர்ந்ததேர், முல்லை மலரும மாலைக்காலத்தே நகர் புகுதலை எண்ணி நிரையாச் செலலும் பாம்பின் விரைவோடு வேகமாகச் செல்லும்.

—ஒக்கூர் மாசாத்தியார்

## 325 பாலை

[இது, கொண்டு நீங்கக்கருதி ஒழிந்த தலைமகன்பிரி வின்கண், தலைமகள், தோழிக்குச் சொல்லியது].

தோழி ! கேட்பாயாக. காதலர், வெள்ளிய மணல் பரப்பிய அழகிய பெரிய மனையிடத்தே குளிர்ந்த இருண்ட இரவில் குறியிடத்தே புணர்ந்த களவும் கைகடந்து வருகின்றது. அன்னையும் இதனை அறிந்து இடைவிடாது காவல் புரிவாள். இரங்கத்தககவள்

பின்பு இவ்விடததில உறைவது எப்படியோ என்று சொல்லி அருள் செய்தார்; அருள் செய்து, ஆடுகினற நடையையும, மிக்க வெற்றியையும் விருமபுகின்ற **கொள்ளனை**, **அதியன்** பணிந்த பின்பு, பெரிதும் ஒலிக்கின்ற யெரிய கிணைப்பறை அடஙகினது. அது போல மலை அழகழிந்து, பெரிய கடல் போன்ற அரிய சுரம் வெப்பமாயிருக்கும் ; மிகவும் உனது கூரிய எயிறிடத் தூறிய நீரை உண்ணுதற்கு, குளிர்ந்த மழை ஒரு நாட் பெய்யும் போது, ஒளளிய நெற்றியும் ஒடுங்குகின்ற இயல்பு முடைய பெண்ணே ! உன்னோடு செல்வேன் ; சிறிது நாள் அடங்கியிருப்பாயாக, என்று பல நாட்களாக வருத்தமிலலாத மனத்தோடு, செல்வதை வலியுறுத்தினர். இவையெல்லாம் வேறாக, வடக்கே, நலலவேலையுடைய **பாணனது** நல்ல நாட்டுள் பெரிய விளங்கும் இடமுடைய வானத்து வெயில் எறிக்கும் நீண்டவழியில் ஆளைக் கொல்லும் யானை வழியைப் பார்த்து ஒதுங்கி நிற்கும் சோலையுடைய வழியை மாலையிற் கடக்கச்சென்றவரது பெரிய பழி என்னோ ? அது எனக்கு நோய் செய்யும் தன்மையால். —**மாமூலனர்.**

## 326 மருதம்

[இது, தோழி தலைமகளை வாயின் மறுத்தது.]

விரும்பும் வெற்றிவேலும், ஆபரண மணிந்த யானையும் உடைய சோழனது படைவீரன், மூங்கிற் கோலால் ஆழ மறியமுடியாத காவிரி யாற்றின் ஊர்ப்புறத்தே நீர் நிறைந்த வாயிலிடத்துப், போர் செய்பவனாகிய **பழையனை** நோக்கி விட்ட வேல் போல

பிழையாத கண்ணையுடைய பரத்தை நோக்கிய தன்மையுடையன. நீ,ஊரற்பறவையின் அழகிய வாயி டத்துள்ள புள்ளிபோன்று அழகிய தேமலும், பெரிய குளிர்ந்த கணனும் பெரிய தோளும் சிறிய நெற்றியு முடையவளாகிய சிறிய பரத்தையை, செல்வரது விரைந்த தேர் பள்ளஞ் செய்த வீதியிடத்தே நீன்ற கொடி அசைகின்ற மேலமாடத்து, பெரிய நெற்கதி ரையுடைய மருத நிலத்து அழகைப் போல அழகைப் பாராட்டி விழாவுக்குச் செல்லுக. (வேலைப் போலத் தப்பாத பார்வையைப் பெற்ற நீர் அவளது அழகைப் பாராட்டி விழாவுக்குச் செல்வீராக இங்கு நில்லாதீர் என்றவாறு) —பரணர்.

## 327 பாலை

[இது, பொருள் கடை கூட்டிய நெஞ்சினைக் கழறி யது.]

இன்பமும் துன்பமும் புணர்வும் பிரிவும நல்ல பகல் நேரமும் இரவுபோலவும வேறு வேறு தன்மை யுடையனவாகி ஒன்றோடு ஒன்று மாறுபட்டுள்ளன. இதனை அறிந்தாயாயினை. துணிவினையுடைய நெஞ்சே! இனிமையில்லாத கொடிய சுரத்தே பிரிந்து செல்வதை நல்ல ஆசை தூண்டச் செல்லு தலும் தகுமோ? நீ செல்வதற்குத் தூண்டினுயானல் எமக்கு நிகழ்வதையும் நினைத்தாயோ? நெருங்கிய வெய்யிலுக்கு எழுகின்ற ஆவியை அழகிய அலைகளை யுடைய நீரென்று விரும்பி மிருகங்கள் மிகவும செல் வதும, மரல் வாடுகின்றதுமாயிருக்கும் அகன்ற இடம். உவர் நிறைந்த இடமகன்ற அவ்விடத்தில், சிவந்த வரைகளையுடைய கலங்கல் நீரைப்போலப்,

பாம்பின் அழகிய வரிகளையுடைய உரி, புற்றின் பக்கத்தே கிடக்கும். புறறு அரையை மூடியிருக் கின்ற காய்ந்த கிளைகளுடைய மரத்திலிருக்கும் கரிய கண்ணையுடைய காக்கை, இறந்த பிணங்கள் கிடக் கும் கவர்பட்ட வழிகளில் பசிய ஊனைக் கவரும் அவ் வழியாற் செலவோர் தாம் செல்வதற்கிரங்காது கொல்லப்பட்டவர்களது அம்பைப் பிடுங்கி வருந்து வர். இவ்வாறுன வழியுடைய மூங்கில் வளரும் காட்டைக கடந்தபின்பு எமக்கு ஆவதும் நினைத் தையோ?

(தூண்டிறுயாறுல போனபின்பு ஆவதும் நினைத் தையோ எனறு கூட்டுக.)

—மருங்கூர்ப்பாகைச் சாத்தன் பூதனுர்.

## 328 குறிஞ்சி

[இது, இரவுக் குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல் லெடுப்பத் தலைவி சொல்லியது.]

சுரபுன்னை செறிந்த சாரலில் வெற்றியாலுயர்ந்த கூத்தரது மேளம் ஒலித்தாற்போன்ற முழக்க முடைய இடியேருடு பெரிய மழை நடுச் சாமத் திற் பெய்தது. அந் நேரத்துப் 'பாம்பின் தலையை இடறிக்கொண்டு, நடுச்சாம இரவில் வந்து, வருந்து கின்ற முலைகளைப் பொருந்தித் துன்பம் அகலும்படி தழுவி, இராக்காலத்தில் பொருந்திய அன்பராயினுர். அவர் அந் நட்பை வெறுகக, வளைகழலவும் அலர் பரந்து ஒலிக்கவும் நாம் இவ் வாறுகுதலை அறிந்தன மாயின், இளைய பெண் யானை, மழை தவழ்கின்ற சாரலில் முற்றிய கருப்பத்தை ஈன்று மூங்கிலை

அருந்தும்போது, அதன் அழகை விரும்பிய ஆண் யானை தடவ வாழை சூழ்ந்த சாரலிடத்தே அது உறங்குகின்ற மலைநாடனது அழகிய மார்பை, முயங்குந்தோறும் முயங்குந்தோறும் முயக்கத்தை ஏற்றுக்கொண்டு அடங்கியிருப்போம். தோழி !

—மதுரைப் பண்டவாணிகன் இளன்றேவனுர்.

## 329 பாலை

[இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

அழகிய கண்ணும் நெற்றியும் பசக்கும்படி நோய் மிகுந்து இவ்விடத்தில் யான் வருந்தவும், காதலர் பிரிதலைத் துணிந்து வாழ்தல் வல்லுநரானுர். அவ்வாருனுராயின், குவிந்த சிறிய குடில்களையுடைய சிறு ஊரிடத்தே பெரிய மணி ஒலிக்க, உமணர், வளைந்த நுகத்தே, நுகத்தாணியை இட்டுப் பிணித்த சிவந்த கயிறுடைய வண்டியிடத்து, எருதுகளைப் பூட்டிச் செல்லும், கொடிய இடத்தே, காற்றுப் புழுதியைத் திரட்டிச் சுழற்றி எறிகின்ற வழியிடத்தே மெல்ல நடந்து செல்வார். பாய்கின்ற, நெருப்புப் போன்ற சிறிய வரிகளையுடைய புலிக்குட்டி, பெரிய நல்ல யானை நீரை விருப்பி உண்ணுதற்கு இட்ட தும்பிக்கையைக் கடித்து முழங்கும், இருண்ட குறுங்காட்டில் புலி புகுந்து குட்டி ஈனும், வற்றிய சுனையையுடைய பனி படுகின்ற சிகரமுடைய பல மலைகளைக் கடந்து செல்வார். (பல மலைகளைக் கடந்து புழுதியைக் காற்றுச் சுழற்றி எறிகின்ற வழியிடத்தே நடந்து செல்வர் எனச் சேர்த்துக் கொள்க.)

—உறையூர் முதுகூத்தனுர்.

## 330 நெய்தல்

இது, தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி தலை மகட்குக்குறை நயப்பக் கூறியது.]

மெல்லிய தன்மையுடைய தலைவன் கழியிடத்தே பூக்களைக் கொய்யும் சோலையிடத்தே தங்கியுட, வரிதத மணலிடத்தே வண்டற்பாவை செய்து விளையாடியும், இனிமையாகப் புணர்ந்தும், எளிமை தோன்றப் பணிந்தும் தனது வருத்தம் வெளிப்படத் தனது துயரை வெளிப்படுத்தினான். அவன் இப்பொழுது முன்னை நிலைமையிற்றவறி நமது துயர் அறியாமையின் மறந்த நெஞ்சோடு செல்வான். அவ்வாறு செல்கின்றவன் செல்வதற்கு வருந்தி முன்னின்று தடுக்கச் சென்றது எனது தங்காத நெஞ்சம்—அது அவ்வாறு முடிந்ததோ? அது முடிந்தும் காமத்தைக் கூற நாணிநின்றது. அவர் ஊர்ந்து வந்ததேர் உவ்விடத்துள்ளது. குவிந்த வெண்மணற்கும் பத்துக்கு மேலும், கடற்கரைத் தாழை மடலிடத்தும், அழகிய பசிய அடுப்பங் கொடிகள் நெரிய ஊர்ந்து சென்று, சிறிய குடியிடந்துள்ள பரதவர் பெரிய கடலிடத்தே விட்ட விரைவிற செலலும் வளைந்த படவுபோல உயர்ந்து தெரியும் தோற்றத்தோடு கடந்து செல்லும். —உலோச்சனார்.

## 331 பாலை

[இது, தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

உயர்ந்த அடியும் சிவந்த இலைகளுமுடைய இருப்பையின், கொம்பைக் கடைந்ததுபோன்ற

மிகுந்த வெள்ளைப் பூவை ஆடு பரந்ததுபோல, ஈன்ற கரடியின், இளைய குட்டிகளை உருவி உண்ணும். அவை உண்டு விட்ட மிச்சத்தை பசிய குழையைத் தழையுடையாக அணிந்த பழையர் மகளிர், **கண்கள் திரண்ட நீண்ட மூங்கிற் குழல்களில் பொறுக்கிப் போடு வார்கள்.** அதனை மலையிடத்துள்ள சிறு குடியின் வீதி தோறும் உள்ளவர்கள் உண்பார்கள். இவ் வகையான சிறிய ஊரையுடைய நாடுகள் பல பிறகே கழிய அன்பில்லாதவர் சென்றார். தோழீ! எப் பொழுதும், அரிய இசைத் துறை முற்றிய, கரிய கோட்டுச் சிறியயாழையுடைய யாழ்ப்பாணர் பாடப் பல ஆபரணங்களையும் கொடுத்து நாள் ஓலக்கம் இருந்த கள்ளில மகிழ்கின்ற **திதியன், வேளிரோடு** போர் செய்ய உருவியவாளின் வாய் போன்ற அருஞ் சுரத்தை அவர் கடந்தார். (அரிய சுரத்தைக் கடந்து, சிறிய ஊரையுடைய நாடுகள் பல பிறகே கழிய அன்பிலாதவா சென்றார் எனக் கூட்டுக.)

—**மாமூலனார்.**

## 332 குறிஞ்சி

[இது, இரவுக்குறிச், சிறைப் புறமாகத் தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிந்தது.]

மட்டம் வளர்கின்ற மூங்கிலை அழித்துத், தனது கிளையோடு நின்று நிறம் விளங்குகின்ற யானை மேயும். அது, (மிருகங்கள்) நீர் குடிக்க வரும் பக்கத்தில் மிருகங்களைப் பார்த்துப் பதுங்கியிருந்த பெரிய வலியுடைய புலியைக் கொன்று, கூரிய கொம்பிடத் துள்ள இரத்ததைதை மழைத்துமியிற்கழுவும். கழுவி

கன்முகைகளுடைய சாரலில் மெல்ல மெல்லச் சென்று எதிர்த்த பகையைக கொன்ற இறுமாப் புடன் வண்டு அசுணப்புள்போல ஒலிக்கப் பிடியைப் புணர்ந்து வாழையுடைய அழகிய சாரலில் உறங்கும். இவ் வகையான மலை நாடன் இன்பமான வார்த் தையும் தகுதியான அழகுமுடையன் என நீ அன்று அன்பாகக் கூறி, யான் அன்று அடங்கியிருக்கும்படி சொல்லிய இனிய வார்த்தை மெய்யாயிற்று. தோழி! கேட்பாயாக. விரும்பியவர்களுக்கு அமிழ்தம்போன்ற மாலை மணம் வீசுகின்ற மார்பின் துன்பம் வருத்தாத முயக்கமும் குறைவு படாககாதலும் முன் நாட் போன்றதே. —**கபிலர்.**

## 333 பாலை

[இது, பிரிவிடை வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

யாமரத்தின் வெள்ளிய தளிரிடத்து அரக்கைப் பூசியதுபோன்ற உனது உடல் நிறம பசப்பூரப் பெரிய வருத்தமுடையையாகி அவரிடத்தே பழியைச் சுமத்த விரும்புகின்றாய். அதனை மொழியினாற் சொல்லித் தாங்குதல் முடியுமோ? உனது துயரின் பெருமையைக் கூறின் தேடப்படும்பொருள் இடையாதாயினும், அது கெடும்படி நினைந்து தரிக்க மாட்டார். தோழி! கேட்பாயாக. கோடைகாலத்தே பனையின் குருத்து ஒடிந்து விழும். அது தனது வருத்தத்தைச் சொல்லமாட்டாததாக, துவாரமுடை யதும், சிம்புகள் உடையதுமாகிய அதன் தலை கூம்பி வாடும். அவ்வேனிற் காலத்து உள்ளீடில்லாத பனை

போல யானைகள் கையைத்தூக்கி வானத்தே சத்த மிடும். இவ் வகையான மலையைக் கடந்து தொலை விற்சென்றனராயினும், 'அன்பர் அவ்விடத்தைவிட்டு நாட்படாது வருவார்,' என மகிழ்ச்சி தரும் தன்மை யில் நன்மை கெடாது நின்வாயிடத்திற் பிறந்த நன் மொழி நன்மையாகும்படி வருவராயின் நன்மை யாகும்; வாராது காதலர் அவ்விடத்தராயினும் இப் பசலைநிறம் போதல் எளிதல்ல. சென்ற தேசத்தில் செய்யும் கருமம் முடித்து மீளும் உள்ளத்தர் எனி னும் வரும பெரும் விருப்போடு அவர் தூதனுப்பின் நன்றாகும். —**கல்லாடனார்.**

## 334 முல்லை

[இது, வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.]

போரிடத்து ஓடாத நல்ல ஏற்றின் தோலைப் (போர்த்துக்) கட்டிய வெற்றிமுரசம் இனிய ஓசை யுடன் ஒலிக்க, நாட்டைத் திறையாகப் பெற்றேம். பாகனே! பெரிய ஓசையுடைய கடலில் எழுந்த ஆரவாரததோடு, பெரிய களிற்றின் பெரிய கை போலக் காற்கொண்டு, கரிய பிடிக்கூட்டங்கள் திரளுவனபோலத் திரண்டு, வளைந்த குழையுடைய பெண்கள் மகிழ்ந்து ஆடும் கழங்கை ஒதத ஆலங் கட்டியோடு நெருங்கிய துளிகளைச் சிதறி மழை பெய்து முகில்கள் ஒடுங்கின; வானத்தே, விளங்கு கின்ற சிறகுடைய அன்னங்கள் நிரையாகப் பறப் பனபோல, **நான்கு காற்றைப்போல் செல்லும் குதிரைகள் பூட்டிய** தாமரை மொட்டையுடைய நெடிய தேர்,

கடிய வேகம் நீங்காது, மயிற்கூட்டங்கள் ஆடுகின்ற கார்காலத்தைக் கொண்ட பெரிய கொல்லையிடத்து, வலிய சூட்டையுடைய சில்லு ஈர நிலத்தை வெட்டச் செலுத்து; பூவின் அழகை உடைய கண்ணும் தழைத்த நெருங்கிய கூந்தலும அழகிய சிறிய நெற்றியுமுடையவளை இப்பொழுது நான் காணும் பொருட்டு. —மதுரைக்கூத்தனார்.

## 335 பாலை

[, தலைமகன் பொருள்கடை கூட்டிய நெஞ்சினைக் கழறிச் செல வழுங்கியது.]

மயககமடையும நெஞசததின துயரைத தீாக கும் அருட்குணமுடையவராயினும், ஈதல பொருளில் லாதவர்களுக்கு முடியாததாலை யானும் அறிவேன். யானை தன் அச்சந்தரும் கொம்பு முறியும்படி குத்திக் கோபம் மிகுந்து, இனிமையில்லாத வேனிற்காலத்து, இனிய பெண் யானை உண்பதற்கு வறண்ட கிளைகளை யுடைய ஆச்சா மரத்துப் பொளியைப் பிளந்து ஊட் டும். இவ்வாறு வருந்தும்படி கிடந்த நிலம் பிளந்த அரியவழியே செல்லுதல், நமக்கு அரிதல்ல. பெரிய கொடிப்படையிடத்தே முழக்கப்படும் முரசினையும், வெற்றிப்போரையுமுடைய பாண்டியனது, மாடங் களையுடைய பழைய ஊர். அதன் மதிற்புறத்தே நெடுகச் செல்லுதலினுல் நெடுநேரம் வெய்யிலில் வருந்தியதாயிருக்கும், குறிய பக்கங்களும் திரண்ட காம்பும் பல மலர்களாற்கட்டிய மாலை அணிந்தது மாகிய குடை. அக்குடையின் தன்மையுடையதா யிருக்கும் (தெங்கின் வட்டு). அதன் புறத்தே உள்ள

பாளை (காய்ந்து) வீழ்ந்து போதலும் தட்டியவாளைப் போன்றதும், ஊதிய வயிறுடையதுமாகிய பாளை தோன்றும். அது நாளுறுதலும் அழகிய வடிவுடைய தாயும் முத்துமாலை போன்றுஅழகுடையதாயும் நீண்ட கவரிமான் மயிர் போன்று வண்டுகளுண்டும்படி விரியும். அப்புதுப் பூவிடத்தே முத்துப்போன்ற வெள்ளியபூப்பரந்துதிருக்கும். அது துடைப்பம் போன்று வரி நிறமுடைய தாய் அசையும். இவ்வாறு மிகவும மகிழச்சி விளைக்கும் சிறப்புடையதாய் தகுதிமிகுந்த பூவுடன் முற்ருத இளநீர் (இளந்தேங்காய்) வளரும். அவ்விளனீரினும் இனிதாகக் கூரிய பல்லிடத்தே அமிழ்தம் ஊறுகின்ற சிவந்த வாயுடையவளும் ஒள்ளிய வளையலை அணிந்தவளுவாகிய அவளைக் கொண்டு நாம் சென்ருல் (கொடிய சுரத்தில் செல்வது நமக்கு எளிதாகும்.) —**மதுரைத்தத் தங்கண்ணனர்.**

## 336 மருதம்

[இது, நயப்புப் பரத்தை இற்பரத்தைக்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது.]

துவாரமுடைய காம்புடைய சேம்பின் பெரிய மடலிடத் துள்ள அகன்ற இலையுடைய பசிய இடத்தில், குட்டியோடு உணவை உண்ணுதிருந்த பெண் நீர்நாயின் வருத்தத்தைப்போக்க விடியற்காலையின் இரை தேடச் சென்ற நீர் நாய், வாளை மீனேடு உழப்புதலின் துறைகலங்கியிருக்கும். அதனல் பெண்கள் தெளிந்த கள்ளைக்குடித்து அழகிய குடங்களை வைத்துவிட்டுத் தமது கணவரின் பரத்மையைப் பாடி, விரிந்த பூங்கொத்துகளுடைய காஞ்சி மர

நிழலில் குரவை யாடுவார்கள். இவ் வகையான துறையையுடைய ஊரனது தேர்கொண்டு வரவந்த அழகிய ஆபரணமணிந்த பரத்தையர், எனது நலனை ஏசுவார்கள் என்று கூறுவர். யானைப்பாகன் நெடிது உயிர் வாழ்தல் காய்கின்ற சினத்தையுடைய கொல்லும் யானை கொல்லாமல் விடுதலினாலேயே. அவர்கள் தாமும் பிறரும் (அவனுக்கு) மனைவியராயுளார் போலச் செல்லுதல், மத்தளம் ஒலிக்கத்துணங்கை யாடும் விழாவில் யான் வராமல் விடுதறகே. யான் வரின், வானத்தில் சூரியனோடு திரியும் நெருஞ்சியைப் போல என்னோடு அவன் திரியானாயின், வெல்லும் வேலும், மழைபோல் எய்யும் அம்பும், கரிய பரிசையுமுடைய சோழரது விற்படை திரண்ட குறுங்காட்டிடத்துள்ள வல்லத்துப் புறக்காவற் காட்டில் ஆரியர் படை உடைந்ததுபோல் எனது நேரிய இறையுடைய முன்கையை இறுக்கிய வளைகள் கழன்று உடைவனவாக.

—பாவைக் கொட்டிலார்.

## 337 பாலை

[இது, முன்னொரு காலத்தில் பொருள் வயிற்பிரிந்து வந்த தலைமகன் பின்னும் பொருள் கடைகூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.]

மலைச்சாரலிடத்துள்ள யாமரத்து உயர் சினையில் தழைத்த மாரிகாலத்துக் குளிர்ந்த தளிர்போன்ற மேனியும், பெரிய குளிர்ந்த கண்களும் வருத்தமடைய, இவ்விடத்தைப் பிரிந்து வாழ்தல் இனிதன்று. உமணர் கூட்டம் போன்று பல தூண்களையுடைய குறுகிய மலையிடத்து, மடித்த்வெள்ளோ

லையாகிய அடுக்கைக் கையிலுடைய, தூதாகச் செல்லும் பார்பான் வருகின்ற வழியைப் பார்த்து, உண்ணுது மெலிந்த பக்கமுடைய இவனிடத்தில் பொன்னுருதலும் உண்டு என்று வீணேகொன்று அவனை வீழ்த்துவர், தறுகண்மையையுடைய ஆறலை கள்வர் அவர்கள் பொருளில்லாத (காவிச்) சீலை உடுத்தவரின் வறுமையைப் பார்த்துச் சிவந்த அம்பினராய்க் கையை நொடித்துச் செல்வர். அப்பொழுது இரத்தத்தைக் கொடிபோல விட்டுத் தூங்கும் குடலை வரியுடைய மரல் நிற்கும் வழியிடத்தே ஒரு ஆண் நரி கடித்திழுக்கும் இழுத்து வெள்ளிய பரற்கற்கள் விட்டு விளங்கிக் கண்ணை ஒளி மழுங்கச் செய்யும் கவர்பட்ட வழியிடததில் கள்ளி நிழலில் குழறி இருககும். இவ்வகையான மழையில்லாத கொடிய காட்டுவழியிடையே அவ்விடத்தில் பொருளுண்டென்று தமியேமாய் சென்ற எம்மை, குளிர்ந்து இருட்டிப் பெரிய ஒலியைச் செய்து வானம் மழை பொழிய பெரிய குளிர்ந்த வாடையோடு வருந்துவாளென்று (முன்பு) மீட்டுக்கொண்டு வந்தாய்.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

## 338 குறிஞ்சி

[இது, அல்லகுறிப்பட்ட தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.]

மலை உயர்ந்த ஊரும், புகழப்படும் வீரம் மிகுந்த படையும் உடைய அரசருள்ளும், தருமத்தைக் கைக்கொண்ட செங்கோலுடன், போரிடத்துப் பகைவரின் வீரத்தைக் கெடுத்தெழுந்த, வெற்றியா

லுயர்ந்த திண்ணிய தோளும், பலர் புகழ்கின்ற செல்வத்தை யுடையவனுவன் பசிய ஆபரணங்களை யணிந்த பாண்டியன். அவனது தெய்வமுறை கின்ற உயர்ந்த மலைச்சாரலில் கிளைகளுடைய அழகிய காந்தட் பூ மணக்கும் வாசமுடைய நெற்றியும், அதறகொப் பான நெய்ப்புடைய கூந்தலுமுடையவளது, நுண்ணிய அழகிய விளங்கும் வளைகள், அழகிய பக்கங்களைத் தழுவ முயங்குதல் முடியாது. முடியா தாயினும் விரும்புகின்ற நெஞ்சத்தோடு, வருத்தம் துணையாக, பகைவரின் தேசத்தைப் பாழ்படும்படி அழிக்கும், நினைத்தற்கரிய வலியுடைய வெல்லும் வேலையுடைய **பொறையனது** பெரிய இருண்ட கானத்துக் **கொல்லிப்பாவை** வருத்தத்தைத் தருவது போல வருந்துகின்றேன். அவளிடத்துச் சென்ற தூதோ, பகைவரை வானத்திற் சேர்க்கும்படி உருவிய வலிய பிடியுடைய விளங்கும் வாளுடையவனும் ஈன்றணிமையுடைய பசுக்களைத்தருகின்றவனுமாகிய வீரர்களது தலைவனுகிய பல போர்களுடைய சோழ னது பண்டங்கள் மலிந்த கடற்கரைப் பட்டினத்துப் பெரும் புழக்கமுடைய பெரிய துறையிடத்து முழங் கும் கடற்றிரையினும் பலவாகும்.

—**மதுரைக் கணக்காயனார்.**

## 339 பாலை

[இது, போகா நின்ற தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.]

மிகவும் விசையுடன் செலுதப்படும் விரைந்த குதிரையையுடைய தேரின் வலிய சிலைக்கம்புகள்

சுமந்த சில்லுகள் ஆழ்ந்த பக்கங்களில், பாம்பென்னும்படி விரைந்து நீரோடும். குவித்து விரிக்கின்ற விரல்களைப்போலப் பயற்றின் காய்கள் முற்றும். இவ்வாறாக முன்பனிக்காலம் நின்றது. பொழுது முன்னே செல்லக் கருமத்தின் பொருட்டு எழுந்த அசைவில்லாத உள்ளத்தின் ஆண்மை கோண, காமந்தடுப்பக கவர் பட்ட நெஞ்சம், (வீட்டின்) கண் தங்கவிரும்பி இருதலைக் கொள்ளியின் நடுவினின்று வருந்தி ஒரு முடிவுக்கு வராத எறும்பு போலானது. உடம்புக்கு உயிர் பொருந்தியிருப்பது போன்ற நட்போடு உயிர் வாழ்தல் போன்ற காதலையல்லாது சாதலன்ன பிரிதலையறியாதவள், இரங்கத்தக்கவளாவாள்.

## 340 நெய்தல்

[இது பகற்குறிக்கண் தோழி தலைமகற்குச் சொல்லியது.]

பல நாளையில் வருத்தம் தீரப்பகல் வந்து புன்னைச்சோலையின் இனிய நிழலிடத்தே (பகற்) பொழுதைக் கழித்து, மாலைகாலத்தே மயக்கம் கொள்ளும்படிபார்த்து,தேர்ப்பாகன், அலங்காரத்தை ஆராய்ந்து பார்த்து, அழகிய தேரைச் செலுத்த. நீயும் செல்ல விரும்புவதை ஒழிக. பரந்த நலல புகழுடைய பொன்பூண அணிந்த திரையனது பல பூக்களையுடைய சோலையிடத்துத் தோற்றம் போன்ற இவள், அழகு தொலைய விரைவாகக் கழியிடத்தே திரை வந்து நிறைகின்றது. கூரிய பல்லுடைய பாம்போடு சுறா மீனும் செல்லுவோர் வருந்தும்படி திரியும் பொழுதும்

மயங்குகின்றது. உன்னைப பற்றிய வருத்தம் இவளுக்கு நீங்கும்படி இன்று இவ்விடத்தே தங்கினுல் என்னவோ? வலிய மரக்கலத்தை இராககாலத்தில் மீன் பிடிக்கக் கொண்டு சென்ற வலிய தொழிலை யுடைய பரதவர், மிக்ககாற்றுக்கடிய விசையுடன் நெருங்கலின், கொலைத் தொழிலுடைய சுருப் பாய்ந்து, கிழித்த வளைந்த முடியுடைய நீண்ட வலையை, குளிர்ந்த கடலிடத்து அசைகின்ற காற்று அடிக்குந்தோறும் வீசுதலைவிடுவர். அதனுல் அவை முற்றத்தே உள்ளதாழையில் தூங்கும். இவ்வகை யான தெளிந்த கடற் பரப்பில் நாம் உறைகின்ற ஊரிடத்து பச்சைமீனின் விலைக்குப்பெற்ற வெண் ணெல் மாவில தயிர்விட்டாக்கிய கழியை நினக்குத் தருவேம; வடநாட்டார் தந்த வட்டமான சந்தனக் கல்லில் மேற்குமலையில் (பொதியம) பிறந்த சந்தனக் கட்டையைச் சேர்த்தரைத்த வண்டு ஒலிங்கின்ற தண்ணியநறிய சந்தனச் சாந்தை அணிவேம். (பரநதவர் காற்றடிக்குநதோறும் வினைவிட்டவலை தூங்கும் எனச் சேர்ந்ததுக்கொள்க.)

## 341 பாலை

[இது, பிரிவின் கண்தோழிக்குத் தலைவி சொல்லி யது.]

தோழி! இனி உய்யும் தகுதி யில்லையாகும் மெல்ல மெல்லக் கோங்கும் கொய்தற்கேற்ற தளிர் களைக்கொண்டன. குயிலும் தேன்பரந்த மாமரதின் உயர்ந்த கொம்பில் இருந்து கூவும். அழகிய பெரிய காவிரிக் கரைகள் முட்டி ஓடும்படி நிறைந்து மூங்கிலை

அழிக்கின்ற வெள்ளம் வடியப் பின்னுளில் மழை நீங்கும் ; நீங்குதலும் பெரிய வாய்க்கால்களில் நிற்கும் கலங்கிய நீரை, பெரிய ஏரியையுடைய எருது புல்லை மேய்ந்து பெரிய நாக்குக் கொண்ட களை நீங்கும்படி குடிக்கும் ; குடித்து குறுகிய அடியுடைய காஞ்சி மரத்தின், மாலைபோன்ற பூங்கொத்துகளின் பொன் போன்ற நுண்ணிய தாது மேலே உதிரககூட்டமாய், வாரடித்த மணற் குமபலில் உறங்கும். காதலரின் பெரிய நலத்தை அனுபவிக்கின்ற துணையையுடையவர்க்கு அழகிய இவ்வகையான இளவேனிற் காலம் வந்தது. —ஆவூர் மூலங்கிழார்.

## 342 குறிஞ்சி

[இது, அல்ல குறிப்பட்ட தலைவன் தன்னெஞ்சிறகுச் சொலலியது.]

நெஞ்சே! வருத்துதலிலோ ஒழிகின்றுயில்லை ; நிறுத்த நிற்கின்றுயில்லை; நண்பரைப்போல என்னைப் பேணுவாயாக, உனக்கு யான் உறவினனல்லனோ? நிரைகளைக் கொள்ளும் கள்வர் பெருமானும் ; ஏவிய தொழிலைச் செய்யும் வீரர்களுக்குத் தலைவனும், பணியாதவரது அரிய ஊரை வென்ற வலிமையோடு பருந்துபடியும்படி பல போரைவென்ற மேகத்தை ஒத்த விசாலித்தகையும், கெடாத நல்லபுகழும் உடையவனுவன் தென்னவன். வெல்லும் போரையுடைய கவுரியரது நல்ல நாட்டுக்குத் தெறகே தென்னவனது நீர் இழிகின்ற மருங்கில உள்ள அகழாத மண் கொண்ட புற்றின் அரிய வாயிலைத்திறந்து கல்லுடைய அளையில மறைந்த மலையுறை தெய்வத்தி

லும் அழகியள், துத்தி பரந்த அல்குலேயுடைய அவள். யான் அணையாதவிடத்து, அவள் அரியளாவள்.

—மதுரைக்கணக்காயனார்.

## 343 பாலை

[இது, தலைமகன் இடைச்சுரத்து மீளக்கருதிய நெஞ்சினைக்கழறிப் போயது.]

வளைந்த மூங்கிலை ஒத்ததும் வீங்கிய இறையை யுடையதுமாகிய பெரியதோளும், சிலவாகிய சுணங் கும், அழகு தேமலையும் பல பூண்களையும் அணிந்த முலையுமுடையவளது உயர்ந்த மார்பைத் தழுவ விரும்பினாய். கள்ளின் மகிழ்ச்சி போற் களித்த செவ்வரி பரந்த குளிர்ந்த கண்ணும், சில வார்த்தை களைப் பேசுகின்ற சிவந்த வாயும் உடையவளைப் பிரிந்தாய்.

தடியைக் கையிலுடைய உமணனது, செல்லும் வண்டிச் சில்லின் புல்லிய தலையை ஒடித்த வலிய தலையுடைய நடு கல்லின, மாலைவாடியிருக்கும கழு வாத பக்கத்தில், கூரிய உளிகளால் செதுக்கிய வளைந்த எழுத்துகளிருக்கும். இவ்வகையான வழியிடத்தே செல லும் புதிய மாக்களுக்குப் பயத்தை யுண்டாக்கும் கண்பொரிகின்ற கவர்பட்ட வழியுடைய காட்டின் அகன்ற இடத்து யாமரம் நிற்கும். அதன், அழகிய தளிருடைய பெரிய கிளையில்லாதது போன்ற (ஐத) நிழலிடத்துச், செல்லும் வெயிலைக் கழித்தற்குப், புதிய மாக்கள் நீண்ட செவியும் குறிய காலு முடைய ஆண் கழுதைகளின் முதுகை நிறைத்திருக் கின்ற பண்டங்களாகிய பாரத்தை இறக்குவர். இறக்

கிய அப்பண்ட அடுக்குகளை மறுபடியும் ஏற்றுதவர்களுக்கு விருத்துணையாகி உயர்ந்த கருமத்தின்மேற் சென்ற மனமே! மறுபடி என்ன நினைந்தாய்; நீ வாழ்வாயாக. (கருமத்தின் பொருட்டுமுயன்று பிரிந்த நீ தழுவுதலை விரும்பி மறுபடியும் என்ன நினைந்தாய் எனக் கூட்டிப் பொருள் கொள்க).

—மதுரை மருதனிளநாகனர்.

## 344 முல்லை

[இது, வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.]

பெரிய மழைபொழிந்த வெள்ளை நிறக் காட்டில், அசைகின்ற குளிர்ந்த காற்று வீசுந்தோறும், நிலவு போலக் கொத்தாக முகைவிரிந்த வளைந்த காலுடைய பிடவு, கூரிய அழகிய வெள்ளிய பல்லுடைய பெண்களின் கையைப்போல மாட்சிமைப் பட்டு மிக்க ஒளி செய்யும். இவ்வாறாக,மயில்கள் மெல்லென உலாவும் மரங்களுடைய காட்டில் (பிரயாணத்தின் நடுவில், சூரியன்படமுன், கைதேர்ந்த பாகனே! விரைவாக, வீரக்கழலின் ஒலியைப்போல், நாவுடைய மணியின் தெளிந்த ஓசை ஒலிக்க, நிழல் ஒளிப்பது போன்ற பெரிய வேகமுடைய குதிரையை, விளங்கும் தேரின் தாமரை மொட்டுக்கிளர, கடிவாளத்தைப் பிடித்து, இயக்குவாயாக; பசப்புறுகின்ற துன்பம் வருத்த வருந்திய, விருப்பமுடைய காதலியின் அழகிய முகத்தை நான் காணும் பொருட்டு (காணும் பொருட்டுச் செலுத்துக என மாற்றுக).

—மதுரை அளக்கர் ஞாழலார் மகனார்மள்ளனார்.

## 345 பாலை

[இது, தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

வானம் மழை பெய்து புதுப் புனல் ஓடுதலும் பல மாட்சிமைப்படயாம் உடன் போக்குச் செல்வதற்கு விரும்பினேம். பெரிய புகழையுடைய காட்டின் செல்வியாகிய (கொற்றவை) அருள் செய்தலின், வெள்ளிய காலையும் பல கலணைகளையுமுடைய குதிரையைப், பழையபுகழுடைய, பொருள் செறிந்த நுட்பமான பாடல்களைப்பாடும் புலவன், முகிற் கூட்டங்கள் தவழுகின்ற ஏழில்மலையைப் பாடிப்பெற்றான். அம் மலையின் கரிய காலுடைய வேங்கை மரத்தின் சிவந்தபூமாலையை அழகிய உயர்ந்த அல்குலுக்கு யாம் அணிந்து மகிழ்வேம, சிறிதுநாள் கழியட்டும் என்று முன்னம் என்னோடு பொய்யாகக் கூறினார். அவரோடு அழகிய வேலையுடைய வீரர், வண்டுகள் உண்ணும்படி அணியுமாறு, பெரிய தளிரை ஈன்று பெரிய மரக் கொம்பு முறியும்படி தழைகளைவிட்டு அவற்றை உதிர்த்தபின்பு, பாறையிடதது ஓடும் சிறிய வெள்ளிய அருவியின் நீர்த்துவலைபோல் மலர்ந்த கரிய காலுடைய உஞமரததின் பெரிய கொம்பரிடத்துப் பூத்த வெள்ளைப் பூ செம்மண்ணுடைய சிறிய வழியில் வரியாக உதிர்ந்து கிடககும். தோழி இவ்வாறு காடு அழகு பெறுவதாக, அசைகின்ற காற்றுக்கு ஒடுங்கும் தன்மையில்லாது இதநியின் ஒரு பெரிய நீண்ட விழுது கல்லிடத்தே தடவும் வழியிடத்தே, மிகுந்த வெயிலுக்கு அவரோடு நாம் இளைப்பாறிச் செல்ல. (அவர் சிறிது நாட்கழியச் செல்வம் என்று

பொய்யாகக் கூறினராயினும் இளைப்பாறிச் செல்வதற்கு காடு அழகுபெறுவதாக என்று கூட்டுக.)

—குடவாயிற் கீரத்தனார்.

## 346 மருதம்

[இது, தோழி தலைமகற்கு வாயின் மறுத்தது.]

இறப்புக்கு மேல் உள்ள மழை பட்ட சுண்ணையின் நீரையுடைய புறம போன்ற, குறுகிய சிறகையுமுடைய கொக்குச் சேவல், வெள்ளியாற் செய்த வெளளிய இலைபோன்ற கயல் மீனைப் பிடிக்க நினைத்துக், கள்ளைக் குடித்து மகிழ்ந்து ஆரவாரிக்கின்ற உழவர், காஞ்சிமரத்தின் குறிய தடிகளால் குததி, இனிய சுவையுடைய, மெல்லிய மூங்கில் போன்ற கரும்பை ஒத்த நல்ல பயிரை நெருஙக நட்ட பெரிய நெல்விளையும் வயலிடத்தே, பசிய பொத்தியை வருததிக் கொண்ட வலிய வாயும், வளைந்த சிறகையும் உடையதாய், உயர்ந்து ஓடுகின்ற வேகமான நீரை நோக்கி மெல்ல மெல்லப் பார்த்து இருக்கும். இவ் வகையான நீரையுடைய ஊரனே ! நீ உனது பண் அமைந்த நல்ல யாழையுடைய பாணனோடு, வார் இழுத்துக் கட்டியதும் மார்ச்சனையுடையதுமாகிய மேளம் போலக் கண் அதிர்ந்து ஒலிக்க, மகிழ்கின்ற துணையாகிய சுற்றத்தோடு கள்ளை அருந்தி யெம்மனைக்கு வராயாகி நேற்று உமது (பரத்தையின்) மனையிடத்தே சென்றீர். அப்போது அம் மனையிலுள்ள குறிய வளைகளுடைய பரத்தை மகிழ்ந்தாள். அம் மகிழ்ச்சி, நெடிய தேரும் ஆபரமணிந்த யானையும் உடைய **பழையன் மாறனது** மாடங்கள்

பொலிந்த வீதிகளையுடைய கூடலிடத்தே, வெள்ள மாகிய படையோடு படையெடுத்துவந்த கிள்ளி வளவ னின் நல்ல போரைச் சாய்த்து, வேகமுடைய குதிரை யோடு யானைகள் பலவற்றைக் கவர்ந்து, பகைமன்னர், ஊரைக்கொள்ளக்கண்ட கோதை மார்பனது மகிழ்ச்சி யிலும் பெரிதாகும். யாம் அம் மகிழ்ச்சியை எப் பொழுதும் போற்றுகின்றேம். இது நகைக்கத்தக்க தாகின்றது. —நக்கீரர்.

## 347 பாலை

[இது, தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொலலியது.]

தோள்களின் பழைய அழகு அழியும்படி தினமும் நலல அழகைக கவர்கின்ற பசலை வருத் தத்தைத் தருகின்றது. மிகப் பெரிய படையை யுடைய சேரலாதன், பெரிய கடலிடத்தே சென்று கடம்பை அறுத்துச் செய்த பண் அமைந்த (வெற்றி) முரசின் கண் அதிர்ந்ததுபோன்ற கௌவையை ஆர வாரமுடைய மூதூரிடத்துள்ள கொடிய வாயை யுடைய சேரியிடத்தவர்கள தூற்றுவார்கள். அவ் வலர் நமக்கு நீங்கும்படி அவர் (வரைவிடைவைத் துச்) சென்றனராயினும் அவர் சென்ற கருமம், வாய்ப்பதாக. தோழி! கேட்பாயாக. மழை பெய் யாது மறைய மூங்கில் வாடும பக்க மலையில் அழகிய நிறமும் வீரமும் உடைய புலி பாய்தலும் குவிந்த அடி யும் வெள்ளிய கொம்புமுடைய களிறு முழங்குகின்ற சத்தத்தைக் கேட்டுக், கன்றை விட்டு ஓடிய பெண் யானை கையைத் தலையிடத்தே வைத்த மயக்கமாகிய

நடுக்கத்தோடு, மகவைப் பறிகொடுத்த பெண்டிரைப் போல் தோன்றும். இவ் வகையான நீண்ட மர முடைய சாரலையுடைய மலையைக் கடந்தார்.

—மாமூலனர்.

## 348 குறிஞ்சி

[இது, தலைமகன் சிறைப் புறத்தானாகத் தோழி சொல்லெடுப்பத் தலைமகள் சொல்லியது.]

முற்றத்தே, தேனின் மிகுந்த சுவையும், திரண்ட அரையுமுடைய மாமரம மேல்காற்றுக்கு உதிர்ந்த, வாசங் கமழ்கின்ற இனிய கனியின் இனிய சாற்றை, அதுபோன்ற இனிய பலாப்பழத்தின் சுளையுடன் குற வர் கலப்பார்கள். இதனோடு தேனையுங் கலந்து வண்டு மொய்க்கும்படி நெடிய மூங்கிற் குழாயில் முற்றவிட்ட கடிய காரமுடையதும் பாம்பின் விடம் போன்று கடுப்புடை யதுமாகிய கள்ளை, உயர்ந்த சிகரம் தேவருலகை முட் டும் மலையிடத்துள்ள, பெருமையுடைய குறவரின், தளிர்களோடு கூடிய தழைகளை உடுத்த மளிர் நிறையக் குடிப்பர்; குடித்து சாரலிடத்துள்ள பெரிய தினைப் புனத்தை மறந்திருப்பார்கள். அப்பொழுது தினையை யானை கவரும். அதனைப் பொறுத இளையரும் முதிய வர்களுமம சுற்றத்துடன் திரண்டு வில்லை எடுததுத் திரிவர். இவ் வகையான மலைநாடனது நிலையிலலாத நல்ல வார்த்தையை நம்பிய நெஞ்சே! என்ன ஆகுமோ?

—மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனர்.

## 249 பாலை

[இது, தலைமகன் பிரிவின்கண் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

அரத்தினுல் வெட்டிச் செய்யப்பட்ட அழகிய இறுகிய வளைகள் முன்கையிடத்து வரையை உண்டாக்கி இறுக்கிய, பழைய அழகு கெட அவர் யாது நினைந்தார், தோழி! இயமனது **சமன்செய்** கோல்போல (நடுவு நிலை) குற்றமில்லாத நல்ல வார்த்தைகளை, அலைந்து திரியும் சுற்றத்தாரோடு பாடுகின்ற பாணர்கள் சென்ருல், நன்னன், உதார குணமோடு, போர்களம் பாழாக அரிய பகைவர் ஊரை அழித்துக்கொண்ட பெரிய ஆபரணமாகிய செல்வத்தை ஆலோசியாது கொடுப்பான், அவனது நல்ல நாட்டிலுள்ள **ஏழில் மலை** சாரல் அழகு விளங்க ஒழுங்கான உயர்ந்த அரையுடையதாய் நிற்கும் கரிய காலையுடைய வேங்கை மரத்தின், நெருப்பை ஒத்த கவள உணவை உண்டு (பூவைத் திரட்டி உண்டு) யானை தனது பொறியுடைய நெற்றியில் வலிநிறைந்த விசாலித்த கையை வைக்கும். அக்கை பாறையிடத்தில் ஊரும் பாம்புபோல் தோன்றும். இவ் வகையானதும் வேறு மொழி வழங்குவதுமாகிய சுரத்தைக் கடந்து சென்ருர். (சுரத்தைக் கடந்து சென்ருர் என்ன நினைத்தாரோ? என்று மாற்றுக.)

—**மாமூலனர்.**

## 350 நெய்தல்

[இது, பகற்குறி வந்து நீங்குந தலைமகற்குத் தோழி சொல்லியது.]

கழியிடத்தே சிறிய வெள்ளாம்பல் மலரும், காவி மலரும் கூம்பின. துறையிடத்தே எறிகின்ற திரை ஒலிபோல அலர் பெரிதானது. பக்கத்தே சென்ற

பெரிய பிளவுபட்ட கொம்புபோன்ற கால்களை யுடைதும், கரிய சேற்றின் ஈரமுடைய புற்றில் இருப் பதுமாகிய நண்டு, தெரியும்படி உலாவுவார் இன்மை யால், நித்திரை கொள்ளாது (உலாவுவதா)யிற்று. வளைந்த நுகத்திற் பூட்டும் திரண்ட காலையுடைய கழுதைகளை ஒலிக்கின்ற மணியுடைய உயர்ந்த தேரிற் பூட்டச் செல்லாது, உயர்ந்த அழகையும், குளிர்ந்த கண்ணையும் உடையவளின் குறையைத் தீர்க்கும் பொருட்டு அவளைச் சேர்ந்து செல்வீராக. பெரிய கடற்கரையை உடைய தலைவனே! விளங்கு கின்ற கரிய கடற்பரப்பில், கொல்கின்ற சுறுவைத் தப்பி வலம்புரிச் சங்கு மூழ்கும். இவ் வகையான கடலில் திமிலை ஓட்டும் பரதவர். **கொற்கைத்** துறை யிடத்தே ஒலிக்கும் தலையுடைய சங்கு முழங்க, விழா வெடுப்பர். அக்கொற்கையின எதிரே இறங்குகின்ற குவிந்த மணற் கும்மத்தின் மகிழும்படி தோன்றும் எமது சிறிய நல்லை ஊர். —**சேந்தன் கண்ணனார்.**

## 351 பாலை

[இது, பொருள் முற்றி மீளா நின்ற தலைமகன்றன் னெஞ்சிற்குச் சொல்லியது.]

வேறு நாட்டின்கண் உறைதலை விரும்பி மேற் கொண்டு, பெறுதற்கரிய காதலி பின்னால் வந்து வழி விடச் சென்று பொருளை ஈட்டிய மகிழ்ச்சி நிறைந் ததும், குறைபாட்டை முடித்ததும் நிறைந்ததுமாகிய நெஞ்சோடு நான் மீளுவதை அவள் அறிவாளோ? வெய்யில் காயக் கழல்கின்ற இலையை உதிர்த்தி யதும் காற்றோடு பொருகின்றதுமாகிய தாழ்ந்த கிளை

யிடத்து நெருப்பு நெருங்கி எரிவது போன்ற அழகிய குழைச் செறிவில், துவாரமுடைய பூக்களை யுடைய இருப்பை நிற்கும். இவ்வகையான இருப்பகைகள் நிற்கும் புல்லிய காட்டிடத்து உள்ள வழியில் (யான் வருதலை யவள் அறிவாளோ?) யான் இவ்வாருக, காதலி கவலை படிந்த மனதோடு குறிதாக நிலத்தில் வட்டங் கீறிப்பார்த்து, சுவரிடத்தே (நகத்தால் பிரிந்த நாட்களைக் கணக்கிடக் கீறிய கோடுகளை) எண்ணிப் பார்த்து நினைந்து அழுவாள். நீண்ட குளிர்ந்த கண்களில் அசைந்து விழுகின்ற ஐத கண்ணீர் பொன்தோட்டிடத்தே தெறிக்கும். அவள் திருந்திய ஆபரணங்களையுடைய முன்கையை நாடியில் ஊன்றி இருந்து படுக்கையிடத்தே கிடந்து வருந்துகின்ற வருத்தத்தைக்களையும் மருந்து யாதென நினைக்குந்தோறும் **பல்லி சொல்லும்.** அப்பொழுதவள் **புள்ளைத்** தொழுது நல்ல சகுனத்தைக் கேட்க எதிர்ப்பார்த்து உறையும் செவியுடையளா யிருப்பாள்.

(நிறைவுடைய நெஞ்சோடு புல்லிய காட்டிடத்துள்ள வழியே செல்ல, அவள் அறியாது தொழுது உறையும செவியளாவள் என்று சேர்த்துக் கொள்க.) —**பொருந்தி ஷிளங்கீரனுர்.**

## 352 குறிஞ்சி

[இது, வரைந்தெய்திய பின்றை மணமனைக்கட் சென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

பெரியவளேவுடைய பலாவின் குடத்தைப் போன்ற பெரும பழத்தைப் பல குரங்குக் கூட்டத்துக்குத் தலைவனுகிய (தன் தொழிலாகிய மரமேறுதலை

யன்றிக்) கல்லாத ஆண் குரங்கு பெரிய ஓசை செய்யும் அருவி ஓடும் பாறை மருங்கில் ஆடுகின்ற மயிலுக்கு முன்னே, கூத்தரின் முழவு ஒலியைக் கொள்கின்ற மூதூரிடத்தே, விறலியின் பின்னே மேளத்தை வைத்துக் கொட்டுபவன்போல, மார்போடு தழுவித் தனது துணையை அழைக்கும். இவ் வகையான மலை நாட்டையுடையவன், நல்ல குடியிற் பிறந்தவன், கூடினவர்களைப் பிரியான்; எம்மை விட்டு நீங்காத கெடாத அன்பையுடையவன் என்று இவ்வாறெல்லாம் பெருமைகளைக் கூறி வாயிலாகச் சேர்த்தவளே! காதலையுடைய தோழி. நீ நல்லவள். விரைந்த குதிரையும் உயர்ந்த தேரும் உடையவன் அஞ்சி. புகழத்தக்க பாணன் அவ் அஞ்சியின் நலல புகழை நல்ல பாட்டுக்களால் பழைய புகழோடு நிறுத்தினன். அவன் மேன்மையாக நாட்டிய பண்களிலும் புதுவதாகப் புனைந்த திறத்தினும் நாவின் வளத்தினும் அவன் எமக்கு இனியன்.

## 353 பாலை

[இது, முன்னொரு காலத்துப் பொருள் வயிற் பிரிந்த தலைமகன் பொருள் முற்றி வநதிருநத காலத்து மீண்டும் பொருள் கடாவின நெஞ்சிற்குச் சொல்லியது.]

கருமத்தின பொருட்டுப் பிரிதலும் உண்டோ? பிரிவதாறலும் இனிக் கேள். நெஞ்சே! வாழ்க. தினமும் கனவு கழிந்ததுபோலாகி, விழிப்பில் நாட்களின் கழிவும், மூப்பின் வரவும், அரிது பெறுகின்ற சிறப்புடைய காமததின் இயற்கையும் இந்த நிலைமை

யில் அறியாய்; ஆயினும் செல்லும் வழியிடத்து மூங் கில் ஆடும். மூங்கிலைத் தீண்டிக், கல் என்று ஒருமை இலைகளை உதிர்த்த, வெப்பத்தையுடைய மேல் காற்று, நீண்ட வெள்ளைக் காட்டிடத்துள்ள சாம்பரை, வாரிச் சுழலும்படி கடிய வெய்யில எறிக்கும். இவ் வகை யான வெப்பத்தையுடைய கொடிய காட்டில் வாடிய நடையுடைய இளம் பெண் மானைத் தழுவிய, விளங்கு கின்ற புள்ளியும் அறுத்துச் செயத்துபோன்ற கொம் பும் உடைய அழகிய கலைமான், நீர் வறறிய துரவில் தண்ணீர் குடிக்க விரும்பும். தண்ணீர் விடாய்த்த சிறுமையால தழை உண்ணுதலை மறந்து, உண்ணீர் இன்மையால் ஒதுங்கித் தளரும். இவ்வகையான மர நிழலற்ற வழியுடைய சுரத்தைக் கடந்து, நினைப்பா யல்லேயோ?

விருந்துகள் ஒழிவதை அறியாத பெரிய குளிர்ந்த பந்த ரிடத்தே வந்த விருந்தினரை உபசரித்து, தண்ணென்று தாதுகள் பொடியை உதிர்நத தாழம்பூ மடல்களையும், வீழ்கின்ற இதழுடைய அலரிப் பூவையும் மெத்தை யிடத்தே பரப்பி, அலங்காரம் பெற்ற படுக்கை யிடத்து, நமமோடு நல்ல மொழிகளைப் பேசும் பொலிந்த கூந்தலும அழகிய ஆபரணமுமுடைய வளது குணத்தை நினைப்பாயாக.

—மதுரை அளக்கர் ஞாளனுர் மகனுர் மள்ளனுர்.

## 354 முல்லை

[இது வினைமுற்றிய தலைமகற்கு உழையர் சொல்லி யது.]

இடியை ஒத்த வெற்றிமுரசு போர்க்களத்தே ஒலிப்ப, மத வலியையுடைய யானை கோபிக்கும்

பாசறையிடத்தே வென்று கொடியைத் தூக்கினன், அரசனும். கன்றோடு பாலையுடைய ஆட்டுக் கூட்டம் முல்லை நிலந்தோறும் துள்ளித் திரிய, கோவலர் குழல் களை வாயில் வைத்து ஊதினர். பெரிய விரிந்த தலை யாட்டமும் விரைந்த நடையுமுடைய குதிரை செல் லும் வழிக்குப் பின்னே மிக விரைந்து வீரர் ஓடப், பாகன் பிடிவாரைப் பிடித்துக் குதிரையைச் செலுத்து கின்றான். புலவர் புகழின் குறியாகக் கொண்ட பொன் தாரணிந்த மார்பிடத்து குளிர்ந்த வாசமுள்ள சந்த னத்தின் நுண்ணிய தாள்களை அணிதற்கு அவன் வெற்றிகொண்ட மகிழ்ச்சியோடு செல்வானானால், அழகிய மலர்போன்ற கண்ணுடைய தீமையில்லாத வளது கண் பசப்பு எங்கே தங்க முடியும். (தங்க மாட்டாது என்றவாறு)

—மதுரைத் தமிழ்க் கூத்தன் கடுவன் மள்ளனார்.

## 355 பாலை

[இது, பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லி யது.]

மாவும் அழகிய தளிரை ஈன்றன. குயிலும் கொம்பர்களிலிருந்து மிக இனிமையாகப் பலமுறை கூவும். பழுத்த இலைகள் சொரிந்த பூ விரிகின்ற பெரிய கிளைகளிலே, யாழ் வல்லவன் கையினால் தடவி வாசிக் கும் இனிய ஓசையுடைய பாலை நரம்பு ஒலிப்பதுபோல் வண்டின் கூட்டம ஆரவாரிக்கும். தெளிந்த நீர்நிலை யின் பக்கத்தே வெண் மணலின்மீது பூந்தாது சொரி யும் குளிர்ந்த சோலையிடத்துக் காதலர் சென்று, தமது அழகிய மனையை மறந்திருக்கும் நல்ல இளவேனில்

வந்தது. அது வந்ததாயின் பெரிதும் இலங்குகின்ற வளையை நெகிழ்த்த வருத்தத்தைக் காட்டிப் புலந்து வருதற்குச் செல்வேமோ தோழி! (யாம், தமியேமாக நீர் பொன்னை விரும்பி அருளில்லீராகி இவ்வாறுகு தல் ஒத்ததோ என்று சொல்வதற்குச் செல்வேமோ தோழி என்று கூட்டுக.)

—**தங்காற் பொற்கொல்லனார்.**

## 356 மருதம்

[இது, பின்னின்ற தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி தலைமகளைக் குறை நயப்பக் கூறியது.]

மேற்றுறையிலிருந்து கழுவுதலிற கீழத்துறைக் கண் வருகின்ற நீரை அருந்துவதற்கு ஆவென்று கொண்டிருக்கும் ஆமை, கானங்கோழி வாத்தியகார னாக தான், வார் இறுக்கிக் கட்டிய கிணைப்பறையாகப் புரளும். இவ் வகையான ஊரன், நெடுந் தெருவி னிடத்தில் பொன் வளை அணிந்தவளின் முன் கையைப் பற்றினவனாக நிற்கக் கண்டேன். காணடலும் அன் னாய்! என்றேன். பழைய நட்பைப் பாராது உடனே அவன் கையை விட்டான. யான, **நன்னனது பறம்பு மலையில்** சிறிய சாணைக்கற செய்வோன் பசையோடு சேர்த்திய கற்போனற நாவினேன் ஆயினேன். அது கழிந்தமையின் (அதனை) ஆய்க்கு (உனக்கு) சொல்லே னாயினேன். நல்ல தேரும், வேகமான பெரிய யானையு முடைய சோழரின் மருகனாகிய, நீண்ட நெற்கதி ருடைய **வல்லங்கிழவோன்** பகைவரது காலடியை நினையானாயினும், அவர்கள் அவனுடைய மதிற் கதவுப் புறத்தே வந்து திறைகொடுத்து நட்புக்

கோடலை முயலுவர், அதுபோல, தழைத்த செறிந்த கூந்தலையுடைய நம்மிடத்தே அவர் அருளாது நம்மைக் கொன்றனராயினும் கொலை பழுதில்லையாகும். அருவியிடத்தே ஆம்பல் செருககி வளர்ந்த முன்றுறையிடத்தே நன்னன் ஆய்கின்ற பிரம்புபோன்று மின்னுகின்ற நெய்த்த கூநதலுடையவளே! உனது குறிப்பென்ன?

— பரணர்.

## 357 பாலை

[இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற புறுத்தியது.]

வளைந்த முள்ளுடைய இண்டங்கொடி சூரலோடு பின்னிய பெரிய (மலை) முகையுடைய குறுங்காட்டில, வயா நோயோடு இருந்த உண்ணுத பெண புலியின் வாட்டத்தைத் தீர்க்கப் பெரிய கொம்பையுடைய யானையை, ஆண்புலி, வலப்பக்கத்தே விழும்படி கொலலும; கொல்வதற்கு அப்புலி பெரிய பாறை சிவக்க, வளைந்து முடங்கி நிமிர்ந்து புரளும். அதனுற் புல்சாய்ந்த சிறிய வழி செல்லும் பெரிய கானத்து, யானைகள் உலாவாது ஒன்றின கையை ஒன்று தொட்டுக்கொண்டு செல்லும். இவ்வகையான. இனிய சுனையுடைய பலாத் தோப்புடைய பெரிய **உம்பற்** காட்டை அவர் கடந்தனராயினும், உனது அழகிய ஆபரண மணிந்த பெரிய தோள்கள் வருந்த நீடி உன்னை நினையாது இருப்பது இலராவர். மிக்க பெயலினுல் நிறைந்த இனிய நீரையுடைய பொய்கையிடத்து இலையைக் கடந்து மலர்ந்த குளிர்ந்த நறுமணங் கமழ்கின்ற நீலம், காற்றுக்கு அசைவதுபோன்றவும், பூவிதழபோன்றவுமாகிய உன் குளிர்ந்த

கண்களின் பார்வையை நினையாது இருக்கவோ மாட்டார் (காட்டைக் கடந்தனராயினும் பணைத்ததோள் வருந்த நீடி, கண்களின் பார்வையை மறந்திருத்தலோ இலர் எனக் கூட்டுக.)-எருக்காட்டூர்த் தாயக் கண்ணனார்.

## 358 குறிஞ்சி

[இது, பகலே சிறைப்புறத் தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது.]

நீலம்போன்று நிறம் விளங்குகின்ற கழுத்தும், அழகிய பீலியுமுடைய மயில் இனிய குரலுடைய தாய் விரைந்து மெல்லிய தாளத்துக்கு ஆடும, அத் தன்மைபோன்ற மிக்க அழகை ஒப்பத் திரண்டு, கண்ணின் அழகை ஒத்த குளிர்ந்த நறிய குவளையின் குறுகிய பூவைச் செருகிய நல்ல நாற்றமுடைய கூந்தலையுடையவள், ஆழ்ந்த நீருடைய பெரிய சுனையிடத்தே ஆயமோடு ஆடாது வாடிய மனத்தளாகி வருந்தி, இத் தன்மையடைந்த உனது நிறத்தை நோக்கி அன்னை வினவுவாளாயின், யான் என்ன உரைப்பேன்? அருவி ஓடுகின்ற சுனையிடத்தே யானை உயர எடுத்த ஆடுகின்ற கொடியை ஒப்பத் தோன்றும் சிகரமுடைய மலையை உடையவன் செய்த நோயே அதுவாகும். —மதுரை மருதனிள நாகனார்.

## 359 பாலை

[இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.]

"கண்ணீர் வடிகின்ற மையுண்ட கணணும், பசப்பு அடைந்த தோளும், மிகவும் பிறர் அறியுமபடி சோர்ந்தன. அதனை நாம் தினமும் மறைத்தனமாய்

வாழ்தலாகிய தன்மையை அறியாராய்க் காதலர் வர நீடினர்,'' என்று கூறி ஏன் வருத்த மடைந்தாய். தோழியே! அவர் முன்னமே வானவரம்பனது வெளியம் போன்ற எமது பெரிய நலத்தைத தம்மிடத்தே கொண்டார், அரிய சுரத்திடததே உள்ள கவர்பட்ட வழியில் செல்லுகின்ற கூத்தரது வாத்தியம் பெரிய மலையிடத்தே (எதிர்) ஒலித்ததுபோல, விருப்ப மிகுந்த பெண் யானையைப் பறிகொடுத்த நெடிய காலையுடைய களிற்று யானை, தெய்வம் உறைகின்ற மலைசசாரலில் மழையைப்போல முழங்கும். இவ் வகையான மலையையும் பொய்யாத நல்ல புகழையும், பெரிய கொடையையும் உடைய புல்லியின், கவர் பட்ட கதிருடைய வரகின் அழகிய பசிய தாளுடைய பழங்கொல்லையின் மேட்டு நிலத்தை மறைத்த, காடு சுடுகின்ற வெள்ளைப்புகை, அருவி நீரைபபோல மயங்கும். இவ் வகையான வழியை அவர் கடந்து சென்றார். (காட்டைக் கடந்தவா வெளியம்போனற எமது நலத்தை முன்னமே தம்மிடம் கொண்டார் எனச்சேர்ககுக.)

—மாமூலனார்.

## 360 நெய்தல்

[இது, பகற்குறி வந்த தலைமகற்குத தோழி பகறகுறி மறுத்து இரவுக்குறி நேர்ந்தது.]

ஒற்றைச் சில்லுடைய சூரியன் மேற்கே பெரிய மலையிடத்து மறையும்; மறைய வளைந்த கழி யிடத்தே குளிர்ந்த சேற்றில் நெருங்கி வளர்ந்த திரண்ட காலையுடைய நெய்தலின் நுண்ணிய தாதை உண்ட வண்டுகள் விட்டு நீங்கும். அச்சந்தரும் கடிய

வலியுடைய இரண்டு பெரிய தெய்வங்களின் உருவைப் போல அந்தி வானத்தோடு கடல் அழகு பெற்றுத் தோன்றும். பல பூக்களையுடைய குளிர்ந்த சோலையில் பகற்காலத்தை இவளுடன் கழித்து வந்த மாலைக் காலத்தே நீர் திருமபுவீராயின் இவள் பெரிதும் வருந்துவாள். அதனால ஓட்டத்திற் பிழையாத (தாளம் போடுவதுபோல் ஓடுதல்) பெரிய ஓட்டமுடைய செருக்கிய குதிரை ஊர் உறங்கும் யாமத்துக் கனைத்தலைப் பாதுகாத்து, உயர்ந்த தேரைத் தூரத்தே விட்டு, மெல்லென ஆண் யானையைப்போல மணற் குமபங்களைக் கடந்து இரவில் வருவீராக. ஒலிக்கின்ற நீரையுடைய தலைவனே !; மீன் இனங்களை அருந்துகின்ற நாரையொடு பனைமீதிருக்கும் அன்றில் தங்கும் முற்றத்தே, பொன்போன்ற நலல மணமுள்ள புனனை மலர் பரந்து கிடக்கும் புன்னைச் சோலை யிடத்தே, நாம் செய்த குறியிடத்து வருதல் வேண்டும. (மணற்கும்பங்களைக் கடந்து குறியிடத்தே வருவீராக எனச்சேர்த்துக் கொள்க.)

—மதுரைக் கண்ணத்தனார்.

## 361 பாலை

[இது. பொருள் வயிற் பிரிந்து போகா நின்ற தலைமகன் னெஞ்சிற்குச் சொலலியது.]

தூய தாமரைப்பூக் கூட்டங்களோடு பெரிய இதழையுடைய குவளை மலர் பிணைந்ததுபோல அழகிய முகத்தே, பெரிய செருக்கிய குளிர்ந்த சுழலும் குளிர்ந்த கண்களும், அழகிய வளையணிந்த முன்கையும் உடைய அழகிய மலர் சூடியவளது

டெரிய முலைமுகத்து நூலளவு விலகினாலும்; அவள் முயக்கத்தில் புலந்து உறைகின்ற, மிகப் பெரிய காமததில இன்புறும் அனுபவத்திற் சிறந் தது வேறொன்றும் இல்லை, எனறு அன்பினால் மொழிந்த எனது மொழியைக் கேளாய், பொருள் செய்வதில் மனங்கொண்ட மருட்சியையுடைய நெஞ்சே! கரியபூவிடததுள்ள பொறிபோல வெய் யிலினால் உண்டான பொறிகளை நிறைய உடைய ஆமை நிழலுடைய விருப்பமுடைய பெரிய நீர் நிலை யிடத்துப் புகவிரும்பும். அதுபோல கூரிய பலலு உடையவளது தோளை இனி நீ நினைப்பாயாக. பல மலைகளின வெப்பமான பாறைகளின் பக்கத்தின் பெரிய சுரத்தை, வருத்தம் மிக நாம் கடந்தேம்

—எயினந்தை மகனார் இளங்கீரனார்.

## 362 குறிஞ்சி

[இது, இரவுக் குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல வியது.]

பாமபுறையும் மலை வெடிப்புகளிலிருந்து வந்த குளிர்ந்த நீர் பெருகித் துறையிடத்தே தேன்கலந்து செல்லும்படி ஆறுகள் நிறைந்தன. வெள்ளிய கொம் புடைய யானையுடன் போர் செய்ததினால் தோற்ற பசிய கண்ணையுடைய புலி குகைகளிடததே செல்லும். அது, முருக்கின அருமபுபோன்ற பெரிய நகமும் (கருக் கொண்டதால் உண்டாகும) வயாநோயு முடைய பெண் புலியைக் காவல் காத்துத திரியும் வழியிடத்தே, இரவென்று பாராது வெல்லும வேலை ஏந்தி ஆசை தருதலில் வந்த நல்லவனது நெஞ்சு

பழுதாகும்படி, வறுவியனாய் (தலைவியைத் தலைப் படாதபடி) செல்வனாயின இன்று இந்நேரம் மட்டும் நான் உயிர் வாழமாட்டேன் தோழி! நமது நெருங் கிய முலையின் சுணங்கணிந்த முகதது முத்துமாலை போலவும், மலைசசாரலில் நீண்ட சோலையில் மழைத் துளி தூங்குவது போன்ற குளிருடைய விளங்கும் வெள்ளருவிபோலவும், சந்திரனின் நிலவு நிலததிலே பரக்கினறது. இது ஏன் சொலலுக

–வெள்ளி வீதியார்.

## 363 பாலை

[இது, பிரிவிடை வேறுபட்ட தலைவிக்குத் தோழி சொலலியது.]

**நிரையாகச் செல்லும் குதிரைகளை விரைவாகச்** செலு த்தி அகன்ற பெரிய வானததில சூரியன, பகல கழியும் படி சென்று சுடா மழுங்கிப் பெரிய மலையிடத்தே மறைவான். அப்பொழுது கழிந்த மலர் போல, அணிந்த ஆபரணங்கள் சோர மெத்தையிலே சாய்ந்து வருநதாதி. திரண்ட அரையும் சிறிய இலையு முடைய நெல்லியின் புகர் நிறமுடைய பசிய காயைக் கல்லுடைய வழி அருகில கடிய காற்று உதிர்க்கும். அவை பொற் காசுகள போன்று அழகு பெறப் பரந்து கிடக்கும். இவ் வகையான வழியிடத்தே சென்று, வழிச்செல் வோரைப் பார்த்திருப்பர் கொலை யாகிய கொடிய கொள்கையையுடைய கொடிய ஆறலைப் போா. அவர்கள் வழியிடத்தே செல்பவர் களின் அரிய மார்பில எறிந்து கொன்ற வேலினால் உண்டான புண்ணுடையவர்களை அடைந்த, வளைந்த வாயையும பெரிய நகமுமுடைய பருந்துச் சேவல்

கொழுவிய நாறிய ஊனை உண்பதற்குத தனது கிளையை தெளிந்த கிழ்ககை ஓசையால அழைககும். இவ் வகையான கொடிய சுரததைக கடநதோர் கருதிச் சென்ற கருமம் கைகூடப் பெற்று இங்கே மகிழ்ந்து வந்தார், தோழீ! நின்கரிய அழகிய இரண்டு மலர்க்கணகளுமு, மானபோன்ற பார்வையும பெருங்கவின் கொள்வதாக (பெருங்கவின் கொள்ள வந்தார், எனமாற்றி யுரைகக).

—மதுரைப் பொன்செய்கொல்லன் வெண்ணுகனுர்.

## 364 முல்லை

[இது, பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது].

திசைகளெலலாம் மறையும்படி பரந்து கால்கொண்டு இடியேறுடைய பெருமழைபொழிந்தது. பொழிதலும் அவள் தோள் துவளும்படி, பறைபோல, வரியுடைய தவளை ஒலிததன; வாயிலிடத்தே, விளங்கும் பொன்மாலைகளைத தூக்கினதுபோல நீண்ட கொத்துகளையுடைய கொன்றை அழகு பெறக் காட்டுடன் சுடரைப்போலத தோன்றிப், புதாகளுக்கு மேலே நின்றது. முலலை, வீட்டிடத்தே மலர்நதது. மலையிடத்துள்ள பெரிய வாயுடைய பசிய சுனை, மிருகங்கள் நீருண்ணும்படி பெருகினது. இவ்வாறு கார்காலம வந்தது. இக் காலத்தில் காதலர் கொடிய சினமுடைய அரசனது பெரிய பாசறையிடத்து வெற்றி விருபபோடு நம்மையுமநினையார். நாம் வருந்தும்படி கொலை செய்ய வருவதுபோன்ற மாலை

நெருங்கும்போது கவலையை நீந்தலோ அரிதாகும். தோழி! யாது செய்வேம்?

—மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார்.

## 365 பாலை

[இது, தலைமகன் இடைச்சுரத்து நின்று சொல்லியது.]

அகன்ற வாயையுடைய வானம் பெரிய இருளைப் பரப்ப பகல் பை என்ற தோற்றத்தோடு கழிந்த வருத்தத்தைச் செய்யும் மாலைக் காலத்தோடு சினவாதி. வழியிடத்துள்ள நடுகல்லை ஆளென்று நினைத்து உதைத்த காட்டு யானையின், பெரிய நகம், கரிய பனையின் நுங்கின் பனைமூன் போல ஒழியும். அவ்விடத்து கடிய கண்ணையுடைய ஆறலைப்போர் வருகின்றவர்களைக் காணாமையில மயக்கமுறுகின்ற இடமாகிய, (வெப்பம்) முதிர்ந்த கொடிய சுரத்தே எம்மைக் கொண்டு வந்தாய். கொண்டுவந்து துயர் செய்து ஆறாது வெல்லும் வேலும் பெரிய கொடையுமுடைய கழுவுளின் காமூர்த் தெருவில் நாட்டிய கொடிய அலையுடைய வேங்கை [illegible] குளிர்ந்த நறிய மலர் மணக்கும் அறிய [illegible] கூந்தலுடைய அழகிய பெண்ணிடத்து [illegible]நினைந்தாய். நெஞ்சே! வாழ்வாயாக.

—மதுரை மருதனிள நாகனார்.

## 366 மருதம்

[இது, பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் வாயில் வேண்டியவிடத்துத் தோழி சொல்லியது.]

தாழ்ந்த கிளையையுடைய மருதமரம் வளர்தலினால் அழகு பெற்ற நீர் சூழ்ந்த பெரிய நெற்களம் விளங்க

நெற்போரைப் பிரித்துக்) கள்ளைக் குடித்த, வயலில் வேலை செய்வோர், (சூடுமிதிக்கும்) எருதுகளின் தளையை அவிழ்ப்பர். அவிழ்த்து (சுளகினால் வீசுக்கிக்) கடிய காற்றை உண்டாக்குவர். அதனாற் போகிய சிறிய துரும்புகளுடன் காய்ந்த கூளங்களும் கண கெடும்படி பறந்து பெரிய கடற்பரப்பிலே குளிர்ந்த துறையிடத்துள்ள பரதவரது இனிமை யுடைய வெள்ளுப்பைக் கெடுத்தலின, அவர்கள் கோபித்து வயலுழவரோடு மாறுபட (ஒருவரை ஒரு வர் பிடிதது) மயங்கி கரிய சேற்று நிலத்தே போர் செய்வர். அதைக்கணடு நரைத்த முதியவர்கள், அவர் கள் ஒருவரை ஒருவர் பிடித்த கைகளை விடுவிததுத் தேன் முதிர்ந்த கள்ளை அவர்களுக்குக கொடுப்பார் கள். ‘ இவ் வகையான ” பொனனுபரணமணிந்த **எவ்வியின், நீழல்** போன்ற அழகிய பெரிய தோளும், அழகிய நெற்றியுமுடைய பரத்தையோடு, மணங் கமழ்கின்ற பொய்கையிடத்தே சென்று நீ தனனைப பிழைத்தமை அறிந்து எமது தெய்வப் பெண்ணை ஒத்த தலைவி கலங்கிய கண்ணளாயினாள்.

**—குடவாயிற் கீரத்தனார்.**

## 367 பாலை

[இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகள் வறபுறுக்குந் தோழிக்குச் சொலலியது.]

விளங்குகின்ற சூரியன் திக்கை விட்டுப் பெயர்ந்து பல கதிர்கள் மழுக்கி அத்தமனகிரியை அடைகின்ற நேரத்து, ஆட்டுகின்ற தலையை உடைய முதிய எருது பெரிய குரலில் அழைக்க மாடுகள்

மனைக்குப் பக்கத்திலுள்ள நொச்சியின் பக்கத்தே வந்து தங்கும். இவ்வாறு முற்பக்கத்தே உள்ள அழகிய குடிகளையுடைய சிறிய ஊரிடத்து கரிய கால் உடைய வேங்கை மரம் நிற்கும் சிவந்த மேட்டு நிலத்தே, மிக்க வரகு நிறைந்த குதிர் கிடக்கும். அதன் ஒரு புறத்தில் குவிந்த அடியையும், பசிய கண்ணையுமுடைய கடுவன் காட்டுப் பூனை, இறைச்சியை விரும்பும் பெட்டைப் பூனையின் வருந்துகின்ற பசியைப் போக்க, தளிர்போன்ற கனத்தையும், மயிர் செறிந்த கழுத்திலே விளங்குகின்ற தலையில் முள் முருக்கம்பூபோன்ற சூட்டையுமுடைய சேவலைப் பிடித்தற்குச் சமயம் பார்க்கும். இவ் வகையான, புலவென்னும் மாலை, நல்ல அழகிய முலைகள் நெருங்கத் தழுவுந்தோறும் உயிரைக் குழைப்பதுபோன்று, அழகிய குற்றந் தீர்ந்த துணையைப் புணர்வோர்க்கு இனிதாகும்.
—பரணர்.

## 368 குறிஞ்சி

[இது, பகலே சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.]

செருப்புத் தொட்ட காலையுடைய கானவன் சுட்ட, பெரிய கொல்லையின் கரியைக் கழுவிப் பெரிதும் பட்ட ஈரத்தில (மட்டங்களோடு) தொகுதியாய் வளர்கின்ற பசிய தினையின் நீண்ட கதிரை ஒள்ளிய வளை அணிந்த பெண்கள் காப்பார்கள். அவர்களுக்கு 'ஊஞ்சா'லாக வாடுகின்ற கிளைவிட்ட கொம்பர்களில் பூங்கொத்துகள் நெருங்கிய, குறியமலைக்குப் பக்கத்தில் நிற்கும் வேங்கை மரம். இளம் மயிலின்

குடுமிபோலத் தோன்றும். இவ் வகையான மலை நாட்டையுடையவன, உயாநத மலைகரு அருகில, காந் தட் செடிகள் நிறைநத சோலையில, குரஙகுகளும் ஏறியறியாத மரச் செறிவுடைய குறுங்காட்டில், விளங்கும் சுனையிடத்துத் தெளிந்த பளிங்குபோன்ற நீரிடத்துப் பிடியைப் புணர்ந்த களிற்றைப்போல எம்மோடாடினான். பல நாட்கள் இவ்வாறு நிகழ்ந்து சில நாடகள் கழியாமுன், இவ்வொழுக்கம் அழகிய மூங்கிற் குழாயில கிடந்து முறறி விளைந்த தேறை சமைத்த கட்டெளிவை வண்டு மொய்க்கும் கண் ணியையுடைய குறவா் உண்டு மகிழும் சீறூரிடத்துச், சிறிது சிறிதாக வெளிவந்து, கொங்கர் மணியை அரை யிற் கட்டி மன்றிடத்தே ஆடுகின்ற உள்ளி விழாப் போன்று, பலர் வாய்ப்பட்டு அலரா கினறது. இது ஏனோ? தோழி. —இது மதுரை இளநாகனார்.

## 369 பாலை

[இது, மகட்போக்கிய செவிலி சொல்லியது.]

கண்டேன், மகளே! அன்புகொணட யான் செய் வது என்ன? விளங்கும் வளை அணிந்த, முன்கை விளங்கும் பெண்கள் பலவாறு பாராட்டச் சிவந்த ஆரமுடைய பசிய கிளியும் இனிய பாலை உண்ணாது; மயிலின் சாயலையுடைய, அழகிய ஆபரணமணிந்த தோழியரும் உறஙகார்; சட்டியிடத்துள்ள (பூஞ்செடி களும்) நிறம் விளங்கப் பல மலர்களை அணியா. மர வயிரத்தினால் அழகுபெறச் செய்த அழகிய, வயிரிய சுவ ரிடத்துள்ள பாவையும் பலி பெறாது. நோய் வருத்த இவற் றைக் கண்டு வருந்துவதன் முடிவையும் அறியேன்.

கொடியவள் நினைத்து (வருந்துகின்ற) பூங்கொத்தைத் ஒத்தவளே! 'இன்று உனது தழைத்த கூந்தலை வாரி அலங்கரிப்பாய்' என்று யான் கூறியதற்கு என்னை வெறுத்துத் தன்னகம் வருந்தியவளாகின்றாள். ஆழி. கடல்போற்றனையும், கொடையுமுடைய சோழனது கேடில்லாத நல்ல புகழையுடைய உறந்தைபோன்ற செல்வமுடைய நல்ல வீட்டைப் புதிதாக அலங்கரித்துச் சுற்றத்தார் மணங் கொண்டாடவும் இணங்காளாயினாள். அவள், அழகிய ஐம்மை மாய் வளர்ந்த தழையுடைய நீண்ட வழியால், மணியணிந்த பரிசையும், பெரிய பிடியுடைய நீண்ட வேலும, துணிந்த உள்ளத்தோடு மிக்க வலியுமுடைய சிறியவனோடு அறியாத தேசத்து அரிய சுரத்தே சென்றாள். அவனுக்கேற்ற பெரிய மடப்பத்தையுடையவள் சிறப்பும் சீரும் இல்லாமல், சீறூரிடத்திலுள்ள வறுமைப்பட்ட பெண்களின், ஒரு பகுப்பட்டிய ஒரு தூணையுடைய முற்றமுடைய புல்வேய்ந்த குடில் வீடாகிய வெறிய அயலாளை யிடத்துக் காற்சிலம்புடன் தங்கியிருந்து போயினாள். அதை நினைந்து வருந்துவேன். —நக்கீ.

## 370 நெய்தல்

[இது, பகலே சிறைப்புறமாகத் தலைமகன் கேட்பச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.]

அகன்ற இலையுடைய புன்னையின் பூக் கீழே விழுகின்ற பகற்பொழுதில் யாம் போய் விளையாடி, வளைந்த கூந்தலையுடைய சிறுமியர் வண்டலிழைப்ப செய்து விளையாடிச் செல்லும் நேரத்தில் கழி நெய்த

நல்ல வீட்டில் வருத்தத்தோடு இருப்பாயானல்,உனது தந்தை அரிய காவற்படுத்துவான் என்ருய். அவர் செல்வேன் எனலும் ஆற்றமாட்டாய். செலவின உயிர் வாழமாட்டேன் என்கின்ருய். அவ்வாருயின் ஞாழலின் வண்டு படும்படி நெருங்கிய கண்ணியும், நெய்தலின் குளிர்ந்த மணம் வீசுகின்ற பசிய மாலை யும் அசைய வந்து கடலுறை தெய்வம் கரையிலே நின்றதுபோல நீ சோலையிடத்தே செலல, யான் வெறியாட்டுக் கொள்ளும் பாவைக் கணிந்தவையை ஒத்த எனது ஆபரணங்களைத துறந்து, வெறியாடும மகள்போல உன்னைவிட்டுப் பிரிய ஆற்றேன. இவ் வூர் மகிழ்வதாக. —அம்மூவனர்.

## 371 பாலை

[இது, பொருள் வயிற் பிரிந்துபோக நின்ற தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொலலியது.]

அழகிய விளிம்பு உரிந்த விசையுடைய வலிய வில்லும் சிவந்த அலகுடைய அம்பும் உடைய போரை எதிர்பார்க்கும் ஆறலைப்பார், கணை எய்த லின் மடிந்து விழுந்த தனது துணையை நினைத்து குறியதும், (அம்மானுக்கு) நீணட துணை யாயுள்ளதுமாகிய பெண்மான், பக்கத்தே ஓடி, வருந்தி, முறுகிய கொம்புடைய கலைமானேடு புல்லை மேயமாட்டாத துயரததோடு,வருந்தி உவர் நிலத்து நீர் நிலையில் கலங்கல நீரை உண்ணுது செல்லும் மக்களைப் போல வருந்தி உறங்கும். இவ் வகையான, பசுமை யறற வெம்பிய பாழ்பட்ட இடத்தைத் தமியேமாய்க் கடக்கும் எம்மிலும பார்க்க, தெளிந்த நீருடைய

அழகிய சுனையிடத்துள்ள மலர்போன்ற தெனப், பூவைத் தேடித் திரியும் பறவை ஆசைப்பட்டு விரும்புகின்ற, பூக்கள் சூடிய கூந்தலுடைய நம் காதலியின் கண்கள், கண்ணீர் வடிந்து என்ன ஆகுமோ ? —எயினந்தை மகனிளங்கீரனர்

## 372 குறிஞ்சி

[இது, அல்ல குறிப்பிட்டுப் போகா நின்ற தலைமகன் தன் னெஞ்சிற்குச் சொல்லியது.]

அரிய கோபத்தைச் செய்யும் இயல்புடைய கடவுள் காவல்புரியப் பெரிய, தேன் கூடுகள் தூங்கு கின்ற, அச்சந்தருவதும், மீது நின்று நாடுகளைப் பார்க் கத் தக்கதுமாகிய மலையையுடைய பெரிய **பாழி** நகரிடத்தே, நரைத்த வெள்ளிய தலையுடையோர் மறைத்துவைத்த அரிய ஆபரணங்களாகிய செல்வம் போல் அவள் அரியவளாவள். அவளின் அழகை நினைந்து, கிடையாளாயினும் வருந்தினேம். பெரிய கிளையிடத்தே கட்டிய பலர் உஞ்சாலாடி இறங்கும் கயிறுபோலச் செல்லவும் வரவும் வருந்தி, நெடிய வழியிடத்தே, **குதிரையையும்** கூரிய வேலையுடைய **அஞ்சியின்**, (பகைவர்) போர் முனையை வாட்டிய வளைந்த வில்லையுடைய வீரர் ஆடுகின்ற போரில் பெருமைபெற ஒலிக்கும் பெரிய துடியின் மிக்க ஒலி போல் துன்பம் பெரிதாகி, **மேய்தற்குதவியாகிய மணியை** இழந்த பாம்பைப்போல் நீ வாடினாய், நெஞ்சே! அரசர் கைக்கொண்ட அழகிய மதிலைப்போல் காவல் சிறந்து அடைதற்கரிய பெருமையையுடையள் நமது தெய்வப்பெண்ணை ஒத்தவள். —**பரணர்.**

## 373 பாலை

[இது, பிரிந்துபோகின்ற தலைமகன் இடைச் சுரத்துத் தன் னெஞ்சிற்குச் சொல்லியது.]

பகைவரின் போர்க்களம் கவர்ந்துகொண்டது போலக் கலங்கிப், பீர்க்குப் படர்ந்து வீடுகள பாழ் பட்ட மன்றத்தே மரைகள் நிற்கும். அவ்விடத்தே பெரிய காலையுடைய யானை உரைஞ்சி, வயிரச் சிறும்பு கொட்டுண்ட முதிய தூண் நிற்கும். இவ் வகைய அரிய சுரவழியைக் கடந்த வருத்தத்தோடு, செயலற்று, பெரிய புல்லிய மாலை வருத்தத்தைச் செய்ய தாழ்ந்த கைகளைக் கட்டிகொண்டு தனியேஇருந்து எனது நிலைமையை யுள்ளுவேன். அப்பொழுது எனது நிலைமையை உணராது, கரிய செறிந்த கூந்தலையுடையவள், செறிந்த இருளுடைய நடுயாமத்து மெத்தையிடத்தே கிடந்து, வருந்தி, வெறுக்கின்ற நெஞ்சததோடு ஐதாகப்பெரு மூச்சுவிட்டு, மலர்போன்ற கண்கள் நீர் நிறைய நோய் மிகவும் அடைந்து, அழுது பெரிய தோள்களை நனைப்பாள்; கண்ணீரை மெல்லிய விர லின் நுனியால் தெறிப்பாள்; வெற்றி வேலும் பெரிய யானையும், வெல்லும் போருமுடைய அரசன், ஒருங்கே அகப்படுத்திய, வலிய வாயிலும் ஏப்புழையு முடைய ஒரு கோட்டையை உடைய அரசனைப் போல நித்திரையைத் துறந்தாள். அவள் இரங்கத் தக்காள். —பாண்டியனேனாதி நெடுங் கண்ணனார்

## 374 முல்லை

[இது, பாசறைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.]

' பெரிய கடல் நீரை முகந்து,திசைகளில் இருண்டு, பரந்த உலகம் மறையும்படி வெற்றிபெற உயர்ந்து, வருத்தங்கொண்ட பெரிய முகில்கள், பிளந்தது போலப் பலமுறை மின்னி, தாழ்ந்தது போலக்கிட்ட வந்து சோர்ந்ததுபோலப பெய்வதாகி, இடியும் முழக்குமின்றி, பாணர் திருத்துகின்ற நலல யாழ் நரம் பின் ஓசையைப்போல இனிய ஓசையுடன் துளியைத் தூறி மழைகளைப் பெய்யும். இவ்வாறு கழிந்த பூ நாறுகின்ற வைகறைக்காலத்து மணல் உயர்ந்த காடு அழகுபெற்ற வழியில், குறுகிய ஊதிய தம்பலப் பூச்சி மெல்ல மெல்ல ஓடி, நீலமணி மறைக்கும் பவளம் போலக், காயாவின் வாடிய பூக்களுள் ஒளிக் கும். இவ்வாறு கார்ப்பருவங்கொண்ட அழகிய காலை யில், நல்ல பாகனே, பெரிய தோளும் ஒடுங்கிய இடை யும் அழகிய ஆபரணமும் உடையவள் விருந்து எதிர் கொள்ளும்படி தேரைச் செலுத்துவாயாக.

—இடைக்காடனார்.

## 375 பாலை

[இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

இகுளையே! அவர் சென்று நீண்டு தரிக்க மாட் டார் அவர் பொருட்டாக மிகவும் வருந்தாதி, என்று கூறினை. அம் பெய்தலில் திறமையைக் காணுதற்கு ஆறலைப் பார் புதிய மாக்களை அவர்களிடத்தில் ஆப ரணங்கள் இல்லையாயினும்கொன்று புட்களுக்கு இரை யர்க்குவர். இவ் வகையான கல்லாத ஆறலைப்பார் ஆரவாரிக்கின்ற வழியிடத்தே நரிக்கூட்டங்கள் கிளை

களோடு கூடியிருந்து நிணததை அருந்தும். இரத்தத் திற்பிரண்ட விரல்கள் பலவற்றையும் வழியிடத் துள்ள எருவைச் சேவல் சேர்க்கும். இவ் வகையான மலையிடத்துள்ள யாமரக்கூட்டம், போரில் வெற்றியா லெழுந்த வலிய தோளையுடைய சோழர் பெருமா ளுகிய, விளங்குகின்ற புகழை நாட்டிய பெரிய **சென்னி,** திறை இடாமையில், குறைப் போரை முடிக் கும்பொருட்டு செம்பை ஒத்த மதிலுடைய பாழி ஊரை அழித்து, புதிய வடுகரின் பசிய தலையைக் கொய்து, கொன்ற யானையின் கொம்பைப் போலத் தோன்றும். இவ் வகையான சுரத்தைக் கடந்தவர் வருத்தமில்லாது சென்றதை அறியின் என் கண்கள் அழாவாகும். —**இடையன் சேந்தங்கொற்றனர்.**

## 376 மருதம்

[இது, காதற்பரத்தை புலந்து சொல்லியது].

மகிழ்நனே ! செய்யும்கடமையுடைய என்னை விட்டுச் செல்லாதிர். நீந்த அறியாதயானை விரை வாகச் செல்லும் நீரில் நீந்தக் கற்றதைப்போல, மிக்க வெள்ளத்தில் அலைகின்ற மருதமரமோங்கிய மருத நிலத்தே செருக்கிய கதிருடைய வயல்களையுடையது **காமூர்** முன்துறை. அதனிடத்தே ஆரவாரிக்கின்ற சுற் றத்தோடு கரிகாலன் காணப் புதுப்புனலிடத்தே, நீரா டும்பொருட்டு அத்தி பிரிந்தான். இனிய புகழ் பொறித்த அழகிய வீரக் கழல் பாதங்களிற் புரளக், கரிய கச்சிற் கோத்துக் கட்டிய அழகிய பொன் பாண்டில் மணி ஒலிகக்ப் புனல் ஆடும் அத்தியின் மிக்க அழகை விரும்பிக் காவிரி அவனைக் கொண்டு

ஒளித்தது. அதுபோல நும்மிடத்தில் செய்யேம். எம்மிடத்தே நுதல் பசந்து காட்டிற்று. சேற்றிடத்தே, அழகிய துவாரமுடைய வள்ளையின் விளங்குகின்ற கொடியை மறைத்து, வண்கதிரோடு நெல்லின் வளைந்த போத்தி விரியத், தலையில் ஆர்க்குடைய வளைந்த இருரல் தெறிக்கும், அழகிய வளைந்த தலையாட்டமுடைய குட்டுவனது மாந்தை போன்ற எனது அழகைத் தந்து செல்வீராக. —பரணர்

## 377 பாலை

[இது, பொருள் கடை கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகள் சொலலியது.]

கோடைகாலம் நீடுதலின் வறண்ட நிலத்தே உதிர்ந்த சிறிய புல்லாகிய உணவை நுண்ணிய பல எறும்புகள் எடுத்துக்கொண்டு புற்றிடத்தே நிறைந்த அரிசியாகிய விதையாத உணவை, வளைத்த வில்லை யுடைய எயினர் உணபர். அவர்கள் பல ஊர்களிற் சென்று பாற் பசுக்களைக் கவர்தலினால் செழுமையான குடி எழுந்து செனறு பாழ்பட்டமன்றம், நரைத்த முதியவர்கள் நடுங்குகின்ற தலையைக் குனிந்திருந்து கருமத்தை மனத்தே ஆலோசிக்கும் பெரிய அழகை இழந்திருக்கும். வரி நிறமுடை கறையான் அரித்தலின் புல்லென்று பெரிய அழகழிந்த பேய் மிக உறைகின்ற மன்றத்து துன்பந் தருவதாகிய ஒரு புறததில் தங்கி இனிய நகையும் சிறிய மெல்லிய சாயலு முள்ளவளின் பெரிய அழகை நினைந்து வழிப்போக்கனுகக் செல்கின்றேம், மிகவும் பொருள் விரும்பி வந்த இரவலர்

இரந்தவற்றைப் புகழ்படக் கொடுக்கும் ஆற்றலுடை யே மாகிய யாம.

—மாரேக்கத்துக் காமக்கணி நப்பாலத்தனர்.

## 378 குறிஞ்சி

[இது, இரவுக் குறிச்சிறைப் புறமாகத் தோழி சொல லெடுப்பத தலைமகள் சொல்லியது.]

செல்வம் கிடக்கின்ற மிக உயர்ந்த மலையிடத்து, கலியாண மகளிரின் கூந்தல் போல் மணக்கும்படி காற்று ஆட்டிய அழகிய தழைத்த வேங்கை மரத்தின் நல்ல பொன்போன்ற நறிய தாது உதிரும். அழகிய பீலியையுடைய அழகிய ஆண்மயில் வேறு வேறு இனமாகிய மலையிடத்து வாழ்கின்ற கொம்பு முறறிய ஆட்டுக் கடாபோல பெருமையோடு நடந்து, ஆடுகின்ற களத்துக்கொம்பு வாத்தியம்போல ஒலித்து, பசிய புறத்தின் மெல்லிய அழகு விளங்கும்படி ஆகாயத்தில் பறந்து பெரிய கணுக்களுடைய மூங்கில் சோரும்படி இருக்கும. இவ் வகையான மலை நாடன் பிரிந்த தனிமையும், கோபிக்கும் அன்னையின் ஆருத பார்வையும், வாடைக் காற்று வீச வருகின்ற பனியுடைய முன் பனிக்காலத்து, வான மிருளச் சூரியன் மேற்குக் கடலில் சேர்க்கின்ற துன்பம மிகு கின்ற மாலையும் எல்லாம் ஒருமித்து நின்று வருத்தும்; வருத்த எவ்வாறு ஆற்றி வாழ்வாய் என்ருய், தோழி! பிரியே னென்று சபதஞ் செய்து நமமைப் பிரிந்தவர் நினையாராயினும், அவர் நாட்டில், பெரிய இலை யுடைய பலாவின் கனியைக கவருகின்ற கையுடைய தாகிய கல்லாத மந்தி கடுவனேடு துள்ளுகின்றதும்,

பொல்லாத தெய்வ முறைகின்றதுமாகிய பெரிய மலை யிடத்துப், பெரிய இனிய அருவியைச் சூடி வானை முட்டும சிகரம் தோன்றுவதை நினைப்பேன். (அவர் நாட்டில் சிகரந் தோன்றுவதை நினைப்பேன் என்ற வாறு) —காவட்டனார்.

## 379 பாலை

[இது, முன்னொரு காலத்துப் பொருண் முற்றி வந்த தலைமகன் பின்னும பொருள் கடை கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.]

எம்மை விரும்பி வாழ்கின்றவளது பழைய அழகு கெட, அறியாமையினால் தீமையைத் தழுவி, அருளில்லாமையால் வளர்ந்த வலிமையோடு பொருள் செய்தலாகிய கருமத்துக்கு முனைந்த வலிய நெஞ்சே! அவ்வாறு நினைப்பாயாயில யான் கூறுவதைக் கேட்பா யாக. விரிந்த கடலையுடைய இந் நிலப் பரப்பைச் சிறப்பாக ஆளும் (ஆணையா) சக்கரமாகிய செல்வம் உண்மையாகக் கிடைத்ததென்றாலும், அது கழிந்து போதல் இரவிற் கண்ட கனாப்போன்றதாகும். ஆத லால், பல மலர்களை வண்டுகள், மொய்க்கும்படி சூடிப்பிடரியிடத்தே அசைகின்ற விளங்கும் குறிய கொண்டையிடத்தே திரண்ட பல நாற்றத்தை வேண்டுமட்டும் நுகர்ந்து மகிழச் செய்கின்ற, விளங்குகின்ற ஆபரண மணிந்தவளின் பூரித்த தோளைச் சேர்ந்து எய்திய நெருங்கிய நித்திரையைப் பெறுந்தோறும், திருகி உடம்பிடத்தே புகுவது போன்ற கையால் வளைத்துத் தழுவுகின்ற முயக்கத் தின் மிகுதியை கண்டு அதனை விடமாட்டேன்.

நீ உனது பல பொருள் விருப்பினால் சொற் கடந்து செல்லுதலை வலியுறுத்தினையானால் காற்றோடு, செறிந்த நெருப்பு எரியும் (மரங்களில்) இலையில்லாத காட்டில் மானின் புறம்போன்ற புள்ளி நிழலில் இளைப்பாறும்போது, இவளது மறத்தற் கரிய பல பண்புகள் அன்போடு வந்து நெஞ்சில் தோன்ற, (நீ நினைத்துச் செல்கின்றதாகிய) கோட்பாட்டை நினைக்கமாட்டாது, ஓடாது நின்று புலியோடு போர் செய்த கொல்லும் கொம்புடைய யானைக்காகப் போர் செய்த, பெண் யானையின் அடிபடுதலின் குழிந்த. தொலையாத வழியிடத்து வலிமைகெட மெலிந்து அசைந்து வருந்து வாயல்லையோ.

—**பாலை பாடிய பெருங்கடுங்கோ.**

## 380 நெய்தல்

[இது, பின்னின்ற தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி தலைமகட்குக் குறை நயப்பக் கூறியது.]

தேரைத் தூரத்தே விட்டுத் தமியராய் வந்து உமது ஊர் யாதென்று கிட்டக்கிட்ட ஒதுங்கி முன் னுள் துறையிடத்து வந்தானன்றோ ஒருவன். அவ் வாறு வந்து போனவன் நேற்று வந்தான், வந்து, அகன்ற இலையுடைய நாவல், நீருண்ணும் துறை யிடத்து உதிர்த்த பழத்தின் அழகு கெட, நண்டு அதனை எடுத்துக்கொண்டு தாழை வேரிடத் துள்ள புற்றில் தனது அன்புடைய துணைக்குக் கொடுப்பதைக் காட்டினான்; காட்டி நம்மிடத்தும் இவ்வியல்பு ஆவதாக என நினைந்த நெஞ்சோடு நீளச்

சென்ருன். உவ்விடத்தில் அவன் தேர் தோன்றும். இன்று நாம் அவனை எதிர்கோள்ளேமாயின் தான் அவ்வாறு செய்ய மாட்டாதவன்போன்ற (எதிர் கொள்ள) நாணம் மிக உடையவனுவன். நாங்கள் வெள்ளிய மணற்கும்பத்தின் உயர்ந்த மேட்டில் மறைவமோ? தோழி செய்வதைக் கூறுவாய்.

—மதுரை மருதனிள நாகனர்.

## 381 பாலை

[இது, தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.]

சிங்கமாகிய நல்ல மிருகம் அஞ்சுகின்ற ஆண் யானை பெரிய நீண்ட மூங்கில் வருந்த, ஏந்திய வெள்ளிய கொம்புகளால் அவைகளைப் பெயர்த்துக் குருத்தை உண்ணும். அச்சந்தரும் படியான இவ்விடத்து, முகில் வறள அழல் எழும்படி திரியும், விளங்குகின்ற கதிர்களையுடைய சூரியன். இவ்வாறு சூரியன் நிழலைத் தோண்டி உண்ட தொலையாத நீண்ட வழியிடத்துக், காவி நிற உடை உடுத்த உடலும், கோபிக்கின்ற நாயையுமுடை வடுகர் தமது விற்களின் சினத்தைத் தீர்த்த அச்சந்தரும் கவர்பட்ட இடத்தில், இரத்தத்தில் தோய்ந்த புலால் நாறுகின்ற பெரிய சிறகுகளையுடைய எருவைச் சேவலின் திரண்ட கூட்டம், பசிய ஊனின் மிகுதியைக கூறிப், பறைசாற்றுவது போல அழகிய வான வெளியை அழகு செய்யும். இவ்வகையான, அரிய சுரத்தைக் கடக்கும் நம்மிலும் பார்க்க, பகைவர் முனையின் மதிலைக் கடந்த போர்வல்ல படையையும்,

வண்டுகள் ஒலிக்கின்ற நறிய மாலையையும் உடைய வானவன், வருத்திய இணங்காத பகைவரது பெரிய கோட்டையைப்போல, பெரிய பாழடைந்த மேனிய ளாய்ப் பெருமூச் செறிந்து, வண்டுகள் உண்ணும்படி ஆழ்ந்த நீரிறபூத்த நிரைத்த இதழ்களையுடைய குவளை மலரின் இரண்டு பூக்கள்போன்ற செவ்வரி படர்ந்த குளிர்ந்த கண்கள் தெளிந்த நீர் கொள்ளும்படி வருந் துவளோ? அவள் இரங்கத் தக்கவளாவள்.

—மதுரை இளங்கௌசிகனார்.

## 382 குறிஞ்சி

[இது, இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி தலை மகட்குச் சொல்லியது.]

பிறரடைந்த துயரைப் பிறரே அனுபவிப்பர். தமக்கு நேர்ந்த துயர் தமக்கே துணையாகும். கடம்புக்குக் கொடி கட்டி கண்ணியைச் சூட்டி, வேறு பல ஒலிகளையுடையவும், தாள அறிதியுடையவு மாகிய வாத்தியங்களை இயக்கி அழகிய முருக வேளைப்பாடும் பாட்டுக்கு ஏற்ப அழகிய பெரிய வெறியாடுங்களரி அழகுபெற மெல்ல ஆடினூர்கள், நமர் என்று, அவர் அறியும்படி கூறுதல் வேண்டும். தோழி! அருவியைப் பாய்ந்த கரிய விரலுடைய குரங்கு, பெரிய காய்களையுடை பலாவின் கனியைத் தெப்பமாகக் கொண்டு, சாரலிடத்துள்ள மூதூரின் முன் துறையைக் கடக்கின்ற வறட்சியை அறியாத சோலையுடைய பெரிய மலை நாட்டையுடையவனது சொல்லை நயந்தவளே!

(சொல்லே நயந்தவளே சொல்லுதல் வேண்டும் என மாற்றுக.) —கபிலர்.

## 383 பாலை

[இது, மகட் போக்கியதாய் சொல்லியது.]

தன்னைப் பாதுகாத்து வளர்த்த என்னைப் பிரிந்து உள்ளாளாயினுள். ஊரும் சேரியும ஒருமித்து அலர் எழக், காடுஞ் சுரமும் செல்லத் துணிந்து, நாடும் தேசமும் மிகப் பலவற்றைக் கடந்த சிறிய இரக்கமில்லாதவளுக்கு அழகு செய்யார்களென வாடினுயோ? வயலைக் கொடியே! தினம் பல கிளைக் கொமபர்கள் வருந்த, மலர்ந்த அல்குலுக்கு அணியும்படி அழகிய தழையை உதவுதற்கு, தொழில் மாட்சிமைப்பட்ட மேலான வளையல்கள் தெறிக்க, பெரிய பாத்திரம் நிறைய முகந்து கொண்ட தளம்பும் நீரையுடையவளாய், அழகிய கண்ணையுடையவள், தாயின் முகத்தைப் பார்த்து, உள்ளே மணியிட்ட சிலம்பு ஒலிக்கத் தினமும் நிறைய நீரூட்டுவள். இனி இவ்வாறு உன்னை நீரூட்டிக் காப்பாற்ற நீ யாரைப் பெறுவாய். நீ இரங்கத்தக்கனையாவை! —கயமனர்.

## 384 முல்லை

[இது வினைமுற்றிய தலைமகனது வரவுகண்டு உழையர் சொல்லியது.]

இருந்த வேந்தனது அரிய தொழிலை முடித்தும், கொண்ட வேட்கையோடு பெரிய தேரிடத்தே யான் ஏறியதை அறிவேனல்லாமல் அது வந்ததை அறியேன் என்று சொல்லும்படி செலுத்தி முயற்

குட்டி துள்ளி விளையாடும் முல்லைக் காட்டில், பிளவு பட்ட கதிரீன்ற வரகுடைய சிறிய ஊரிடத்தே மெல் லிய தன்மையுள்ளவளது வீட்டிடத்தே நிறுத்தி இறங்கும் என்ற உனது (பாகனது) மொழியைக் கேட்டு மருண்டேம். நீ, வானத்திலே இயங்கும் இயல்புடைய காற்றைப் பூட்டினாயோ? குதிரையின் உருவாக உனது மனத்தைப் பூட்டினாயோ? பாகனே அதைக் கூறுவாய். நெடுந்தகை, மலை ஒத்த தன் மார்பிடத்தில் முயங்கி அருள் செய்யும் பொருட்டு மனையிடத்தே புகுந்தான். திருந்திய ஆபரணமுடைய வள் விருந்தைச் சிறப்பாகப் பெற்றாள்.

—ஒக்கூர் மாசாத்தியார்.

## 385 பாலை

[இது, மகட் போக்கிய செவிலித்தாய் சொல்லியது.]

தன்னோடொத்த மயிலின் சாயலையுடைய தோழி மாரும், என்னைப்போலொத்த தாயரும் காணக், காவிரிக் கரையிலே சோலையுடைய உறந்தையைப் போலச் செல்வமுடைய பெரிய மாளிகையிடத்துக் குற்றமடைந்த யாம், நல்ல மாட்சிமைப்பட்ட கலி யாணத்தில் மயிர்ச் சாந்தை இட்டு அலங்கரித்தும் யாம் பல அலங்காரங்களைச் செய்யும்படி அவள் (தனது எண்ணத்தைச்) சொல்லாளாயினாள்; மூங்கி லோடு நெல்லி வளர்ந்த கற்பாறையுடைய சார லிடத்தே வழியில் நிற்கும் வாடிய தலையுடைய ஆல மரத்தின் நெடிய வீழ்து பொறியுடைய தொடை யில் உரைஞ்ச, வளையுடைய முன் கையினால் அதனைப் பிடித்துக களைந்து, கோத்த பசிய மணிவடம் அல்கு

விடத்தே பற்றிக்கிடக்க, கூந்தல், ஆடுகின்ற மயிலின் பீலிபோல் பொலியத் தான் விரும்பிய துணைவன் ஊக்க ஊங்கிச சென்றாள். நம்மையும், வழிநுன் வருத்தத்தையும் நினையாது சென்ற, கூரிய எயிறும, சிவந்த வாயுமுடைய சிறியவள் சிலம்பைக் களைந்து அறியாத தேய்த்தளாகுதல் கொடியதாகும்.

—குடவா யிற்கீரத்தனார்.

## 386 மருதம்

[இது, தோழி வாயின் மறுத்தது.]

பொய்கையிடத்து வாழும் புலால் நாறுகின்ற பெரிய ஆண் நீர் நாய் காலையில் வாளை மீனை இரை யாகக் கொள்ளுகின்ற ஊரனே!

விளங்கும் நெற்றியுடைய ஒருத்தி (பரத்தை) பகல் வந்து, "கரிய நெய்த்த கூந்தலையுடையவளே! யானும் நின் சேரியிடத்தேன், அயல் வீட்டவளாகிய யான் உனக்குத் தங்கையாகுவேன்," என்று சில வற்றைக் கூறி தனது மணி இழைத்த ஆழி அணிந்த மெல்லிய விரலகளால் தண்ணென்று தடவி, நெற்றி யையும் கூந்தலையும் தைவந்து சென்றாள். அதனைக் கண்டு, பெரும, நான் நாணினேன். அந் நாணம், பாணனது மற்போர் செய்கின்ற மார்பின் வலி மிகு தலின், வருந்தி எதிர்த்த ஆரியப் பொருநனது உயர்ந்த திரண்ட முழவுபோன்ற தோள், பாணன் கையினுல் (ஒடிந்து) வலியழிந்த் தன்மையைக் கண்டு நல்ல போரையுடைய கணையன் நாணியதுபோன்றது.

—பரணர்.

## 387 பாலை

[இது, தலைமகளது குறிப்பறிந்து தோழி தலைமகனைச் செலவழுங்கச் செய்தது.]

கொடிய தொழிலைப் பயில்கின்றவர்களாய்க் கிடந்த வேட்டுவரின் கூப்பீடுகைக்குப் பயந்து, வரிப் புறத்தையும், நீலமணிபோன்ற கண்ணையுமுடைய குருவிப்பேடு, நுண்ணிய பொறி அணிந்த கழுத்தும், கூரிய முள்போன்ற சிவந்த காலுமுடைய சேவலை அழைக்கும். இவ் வகையான இடத்தில், வில்வீரர் திரண்ட அரிய போர் சிதையும்படி கொன்று நல்ல புகழை நாட்டிய மானமுடைய வீரரது நிரையாக நடப்பட்ட நடு கற்களில் இரையை விரும்பி இருக்கும் முதிய வாயையுடைய பல்லி (வழிப்போக்கருக்குச்) சிறிது உற்சாகத்தை அளித்ததாயின், பெரிய யானை வழியினின்று செல்லும். இவ் வாறான காட்டிடத்தே நமது காதலர் சென்றார் என்றிருப்பவளுக்கு, அழகிய ஆபரணங்கள் நெகிழ்ந்து பெரிய தோள்கள் வாடி செவ்வரி படர்ந்த குளிர்ந்த கண்கள் வாடும்படி செய்கின்றவரே! உவர் மண்ணைக் கொள்ளும்படி (சீலைகளைத்) தேய்த்த புல்லிய தலையுடைய சிறுவரோடு, அழுக்குகளை அடித்துப் போக்குதலிற் கறை படிந்த பெரிய நகமும், பசை பிரண்ட விரலுமுடைய வண்ணாத்தி, நெடுநேரம் பிசைந்து (கஞ்சி) ஊட்டிய பூவேலைப் பாடுள்ள பட்டாடை விளங்கும் அல்குலின் வரிகள் வாடும்படி பார்த்து, நீர் வருகின்றமையைக் கூறும்.

—மதுரை இளநாகனார்.

## 388 குறிஞ்சி

[இது, இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

தோழி! கேட்பாயாக, நமது மலையிடத்து வளரும் மூங்கிலை அறுத்துச் செய்த வலிய ஓசையுடைய தட்டையினால், நல்ல நாற்றமுடைய சந்தன மரத்தை அடியோடு வீழ்த்தி உழுது பயிரிட்ட குதிரையின் தலையாட்டம்போன்ற கதிருடைய சிறிய தினையைக் கவர்தலின் கிளை நிறைந்த, பெரிய மலைச்சாரலில் குருவிகளை ஓட்டினோம்; உயர்ந்த பெரிய சாரலில் விளங்குகின்ற வாசமுடைய வேங்கை மரத்தின் கவர்களுக்குள் கட்டிய பரணிடத்தே இருந்து, பொன்போன்ற பூந்தாதுகளை ஊதும் வண்டின் இனிய இசையைக் கேட்டிருந்தோம்; இருந்தோமாக, "கரிய நெய்த்த கூந்தலையுடைய அழகிய பெண்களே! வேகமுடைய அம்பு படலும் புண்பிருந்த வருத்தத்தோடு வந்த உயர்ந்த கொம்பையுடைய யானை புனத்துள் வந்ததோ" என்று வினவிச், சினங்கொண்ட நாய்கள் கோபித்துப் பக்கத்தே அங்குமிங்கும் ஓட, வினவிச் சென்ற காளையின் சந்தனம் நிறையப் பூசிய மார்பையும், பெருந்தன்மையையும் மிக விரும்பி இவ்விடத்தில் நாம் இருந்து வருந்துகின்றோம்; அவ் வருத்தத்தை அறியாது ஆய் தனது நல்ல நெஞ்சத்தில் இது முருகனால் உற்ற வெறி என மயங்கி முதிய வாயுடைய வெறியாட்டாளனை அழைத்தாள். அவன் எமது முருகனால் நேர்ந்தது இந் நோய்; இது தணியும் மருந்து

வேன் என்பானுயின, அவனை, நெருப்பைப் போற் கோபிக்கின்ற மயக்கமுடைய யானை மேய்வதற்குப் புனத்தே செல்ல, மழைத்துமி போன்ற ஊன் பிரண்ட அம்போடு, காட்டு மானின் அடியைப் பின்பற்றி வேட்டையாடச் செல்லுமோ? உமது தெய்வம் எனக் கேட்டால் என்னே?

—ஊட்டியார்.

## 389 பாலை

[இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகன் வற்புறுக்குந் தோழிக்குச் சொல்லியது.]

தோழி! கேட்பாயாக, நெளிந்த கற்றையாகிய, சாந்து பூசிய கூந்தலை ஈரமாற்றி மலர் அணிந்தும், வாசம் கமழ்கின்ற அழகிய நெற்றியில் பொட்டிட்டும், பல இதழுடைய மலர்களைக் கிள்ளி வேறுபட நல்ல இளைய பெரிய முலைகளிடத்து அல்லியோடு அப்பியும், பெரிய தோளிடத்தே தொய்யி லெழுதியும, சிறிய பரடுடைய சிவந்த சிறிய பாதங்களுக்கு பஞ்சு ஊட்டியும் என்னைப் பாதுகாத்தும் உன் உனைப் பாராட்டியும் பல பூக்கள பரப்பிய படுக்கையில் பகற் காலத்திலும் நீங்கார். வீட்டிலிருப்பார். அதனை நீ அறிவாய். அது தான் கழிந்தது. விரைவாக வந்து இரக்கின்றவர்கள் ஏந்துகின்ற கைநிறையக் கொடுக்கின்றவர்கள், வெறுக்காத உள்ளத்தோடு புதியவற்றைக் கொடுத்து மகிழும் அரும்பொருள் தேடவெண்ணினர், எ ண் ணி , கோபித்தவர்களின் சிறிய புன் சொல்லாகிய வெறுப்பு நீங்கவும், நல்ல புகழைத் தாம் பெறவும், வெல்லும் வேலையுடைய வானவரம்பனது நாட்டுக்கு அப்பால், வேனில் நீடிய

வெப்பமான காட்டு வழியே செல்லும் வழிப்போககர் வெவ்வேருகப் பிரிந்து அலற, கொல்லத்தக்க வெப் பத்துக்கு அஞ்சி இடம் விட்டுத் தங்கும பெரிய ஆண் யானையைக் கொன்ற பெரிய ஆண் புலி, சிவந்த நிலத்தின் பக்கத்தே தனது காலை வளைத்து, மிருகம் வலத்தே படுதலாகிய வெற்றியோடு மலைச்சாரல் எதிரொலிக்கும்படி, முகில் இடிக்கின்ற இடிபோல முழங்கும், நெடிய பெரிய காட்டுப் பக்கத்தின் மலையைக் கடந்து அவர் சென்ருர். (அரும்பொருள் தேடவெண்ணி வானவரம்பனது நாட்டுக்கப்பால் காட்டுப் பக்கத்தின் மலையைக் கடந்து சென்றவர் நெளிந்த கூந்தலிடத்து மலர் சூடியும்......பகற்காலத் திலும் நீங்காது இல்லில் இருப்பார்; அதனை நீ யறி வாய்; அதுதான் கழிந்தது, எனச் சேர்த்துப் பொருள் கொள்க.) —நக்கீரர்.

## 390 நெய்தல்

[இது, தலை மகன் பாங்கற்குச் சொலலியது.]

களர் நிலத்தில் விளைந்த உப்பின் விலையைக் கூறி, வழியிடத்தே புழுதியுடைய தூர தேசததே செல் கின்ற வளைந்த கோலையுடைய உமணர் நீண்ட வழி யிடத்துச் செல்வர். அவ்வுமணர் கூட்டத்தின் தொழி லாகிய வாழ்க்கைதாஞே? இவளுக்கு. வளைந்து சுருண்ட கூந்தல் முழுவதும் இருள்போலப் புரளு கின்றவளாய், அழகிய அகன்ற அல்குலிடத்து அழகு பெறும்படி உடுத்த பல குழையுடை ஒதுங்குந்தோறும் ஒடுங்கி,உப்பின் விலைக்குச் சரி நெல் லுக் கொடுத்துக் கொள்ளீர்களோ? ஊரவர்களே!

எனச் சேரிதோறும் உப்பின் விலையைக் கூறுவாள். அழகிய சுழித்த கொப்பூழும் மூங்கில்போன்ற தோளுமுடையவளே! நீ உனது மெய்யிடத்தே வைத்திருக்கின்ற உப்பின் விலை என்ன ஆம் எனச் சிறிது தடுத்தேமாக, பெருமையுடைய அப்பெண் உள்ளே அடங்கப் பார்த்து, என்னைத் தடுத்த நீவிர் யாரோ? என்று முத்துப் போன்ற பற்களால் சிறிது முறுவல் செய்து சென்றாள். சில நிரையாகிய வெள்ளிய வளை அணிந்த அப்பேதையின் பொருட்டு வாடினது எனது நெஞ்சு. —அம்மூவனார்.

## 391 பாலை

[இது, பிரிவிடை வற்புறுகத்தும் தோழிக்குத் தலைமகள் சாலலியது.]

இரையைப் பார்ப்பதில் வல்ல காட்டுப் பூனையின் கூரிய பல்லுப்போன்ற வரியாகிய மெலலிய முகையுடைய மெல்லிய கொடியாகிய அதிரல் இடத்தே பூவை ஆய்கின்ற நெருங்கிய வெட்டியையுடையவர்கள் ஆய்வதற்கு இடமில்லாது (நெருங்கி) நிற்பர். இவ்வாறு பூ விற்பவர்கள் அதன் தலையிலிருந்து பூக்களை ஆய்ந்து ஒழிப்பார்கள். ஆண் யானை தனது பெரிய கொம்பிடத்தே, வைத்த வாயிடத்துள்ள வலி அழிகின்ற விசாலித்த கையை அசைக்காது நிற்க, அக்கை மலையிடத்திற் புகும் பாம்பு போலத் தோன்றும். அப் புழுதியுடைய இடத்தில் அரிய வழியைக் கடந்து சென்றவர், அவ்வாசமுள்ள மலரை, தேன்பாய்கின்ற முல்லையோடு, அவைகளின் கரையைப் போக்கி தண்ணிய நறிய என் கூந்தலிற்

சூட்டினூர். அவ்வாறு அலங்கரிக்கப்பட்ட எனது அரும்புகளால் மாட்சிமைப்பட்ட முடியை நினைக்குந் தோறும் முன்னைய பழைய அழகை விரும்புவேன். தோழி! இன்றோடு சில நாட் கழித்து அவர் வரினும் எனது கண்கள் வருந்தித் துயிலாதனவாகும்.

—மோசிகீரனர்

## 392 குறிஞ்சி

[இது, பின்னின்ற தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி, தலைமகட்குக் குறை நயப்பக் கூறியது.]

காட்டிடத்தே விருப்ப மிகுந்த யானையைச் சாகக் கொடுத்த வெள்ளிய கோடுடை யானை நீண்ட பெரிய கையைத் தலையில் வைத்துத் தழையை உண்ணாது வாடி நிற்கும். அவ்வாட்டம்போல் உடம்பின் சோர்வை நன்கு அறியும்படி செய்து, பின்னின் றிரத்தலில் வெறுப்படையானாகி, நல்ல பூந்தாதினாற் செய்த பாவை போன்ற அழகிய பெண்ணும், மடப்பம் மிகுந்தவளுமாகியவளிடத்து, தீமையில்லாது நீ சேர்ப்பாயாக என்று வந்து இரப்பான்; இரப்பானாயின் அவனை வருந்திச் செல்லுதல் மிகவும் இனிமையில்லாதாகும். முடிவு யாது? தோழி! கேட்பாயாக; கல்லென்று பெருமழை பொழிந்த காடு அடங்கிய இரவில், தினை மேய்கின்ற யானைக் கூட்டங்கள் பயந்தோட, மலையிடத்துயர்ந்த பரணிலிருந்து குறவன் எறிந்த வலிய வாயுடைய கவணைப்போலக், கடிய மலை வெடிப்புகள் ஒல்லெனவீரமுடைய புலி சத்தமிட யானை கதறும். அழகிய காட்டிடத்தே மயில்கள் சத்தமிடும். இவ்வாறு மலை முழுவதும் அஞ்சும் பெரிய சாரலிடத்து, வெற்பன் பிரிந்து செல்வானாதலோ அரிது.

அதனாலே உரிமையற்ற தன்மையில் பிரிவானாயின், போரின் பொருட்டு மிகவும் பிரிந்த வெல்லும் வேலை யுடைய அரசன், போர்முனை கொள்ளும் தானையோடு முன்னே வந்து தங்க, தனது எல்லையாகிய வலிய கோட்டையுள் இருக்க ஆற்றாமையால், தான் பிடித்த வலிய வேலின் தோற்றம் பிழைபடாமல், பழைய புகழை ஈட்ட விரும்பி நீங்கிய மூங்கில் வளருகின்ற காட்டையுடைய நன்னன் போல, உனது நலத்தைத் தருபவன் தாங்கமாட்டாதவனானான்.

—மோசிகீரனார்

## 393 பாலை

[இது. பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.]

சிகரங்கள் உயர்ந்த கூட்டமாகிய குன்றுகள் பல வற்றைக் கடந்து, வேறு தேயத்தே செல்ல விரும்பிய அவர், வினை செய்யும் உள்ளத்தராயினார். வழியிடத்தே செல்லும் புதியவர்கள் காய்கின்ற பசி கொள்வர். அவர்களின் பசியைத் தீர்ப்பதற்கு, மேட்டு நிலத்தே விதைத்துப் பலித்த ஈரமான நீண்ட இலையும் பிளந்த கதிருமுடைய வரகின் தொகுதியாக வைத்த (அரிந்த) தாள்களைப், பிளந்த (மாடுகளின்) அடிகளால் உழக்கிக் கொண்ட பல (மீன்) சினைபோன்ற உதிர்ந்த வரகைத் தேமலையும், பெரிய தோள்களையும், நீண்ட காது களையுமுடைய (ஆயர்) பெண்கள், அகன்ற பாறை யிடத்தே இட்டுக் குத்துவர். குத்திய, வயலிடத்து விளைந்தவெள்ளிய முற்றிய அரிசியை ஒத்த அதை

சுழல்கின்ற மரத்தினால் விளக்கிச் சுளகினால் புடைத்து, பூண் இறுக்கிய உலக்கையால் முறை முறையே (மாறிப்) போட்டு எடுப்பர், வலிய முகமுடைய வெள்ளை அரிசியின் மிகுதியைச் சுரைக் குடுவையில் பெய்து வைப்பர். அவ்வரிசியைக் களிமண்ணால் வனைந்த பானையில், சுனைநீரை மொண்டு, கல்லடுப்பிலே வைத்து, கொன்றைப் பூவின் நெருங்கிய தாதைப் போலப் பொங்கிய அவிழையுடைய சோற்றை இடையர் ஆக்குவர். அவர்கள் அதனைக் கொழுத்த நல்ல பசுக்களின் பாலோடு பகுந்து கொடுப்பர். இவ் வகையான பசுக்கள் பலகூடி நிற்கும் பெரும் புகழுடைய புல்லியின் தேனை கூடுகள் தூங்குகின்ற உயர்ந்த மலையுடைய நல்ல நாட்டுக்கு அப்பால், வேங்கட மலையைக் கடந்து சென்றாராயினும், பூங்கொத்துகளைப் போன்ற அழகிய மயிலின் தோகையைப் போன்ற, மயிர்சசாந்து தடவிய தண்ணிய நறிய கூந்தலிடத்து, குற்றமில்லாத குவளை மலரின் அழகிய இதழும், வேனிலுக்குப் பூத்த அதிரலின் மலரும் சூடிய உனது மகிழ்ச்சியைத் தரும் புணர்ச்சியின் இனிய துயிலை மறந்து அவர் நீடித்துத் தங்கமாட்டார். தோழி ! வாழ்வாயாக.

—மாமூலனார்.

## 394 முல்லை

இது, இரவுக்குறித் தலைமகளை இடத்துய்த்து வந்த, தோழி தலைவனை வரைவு கடாயது.

களவும் புளித்துப் போனது, விளா மரமும் பழங்களைப் பழுத்தன ; சிறிய தலையுடைய செம்மறி யாட்டின் பழுப்பு நிறமுடைய முற்றி விளைந்த

தயிரை, கொல்லையில் விளைந்த வரகின் குற்றிய மாட்சிமைப்பட்ட அரிசியோடு, கார் காலத்துக் கரைந்த ஈரமான வாயையுடைய புற்றிடத் துள்ள ஈசலை இட்டுச் சமைத்த இனிய புளிப்பையுடைய சூடான சோற்றை, சிவந்த பசுவின் வெண்ணெய் மேலே கிடந்து உருகச் சிறுவர்கள் இருந்து உண்பார்கள்; இவ்வாறு அவர்கள் இருந்து அருந்தும்படி நீயும்,முள்வேலியுடையதும், வளைந்த கால்களை நாட்டி இடப்பட்ட பந்தலுடையதுமாகிய, புதிய மட்பாத்திரம் போன்ற சிவந்த முகப்பையுடைய சிறிய வீட்டில் அலங்கரிக்கப்பட்ட கரிய கூந்தலையுடைய உனது மனைவி, நீ உண்பதற்கு பாலுடைய சோற்றைத் தொடுமாறு ஒரு நாள், மிகப் பெரிய தலைவரே! வந்து செல்லுதல் வேண்டும். எமது சிறிய நல்லூர் காட்டில் உறையும் இடையர் ஆடுகளைப் பிரித்தற்கு இதழை மடித்துவிடும் சீழ்க்கைக்கு வெருண்டு குறுமுயல் மிகவும் மண்டிய புதரிடத்து ஒளிக்கின்ற புல்லுள்ள இடத்துள்ளது.

—நன்பலூர் சிறுமேதாவியார்.

## 395 பாலை

[இது, பிரிவிடைத் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

குளிர்ந்த தடாகத்தில் முளைத்த பெரிய காலுடைய குவளையின் மாரிகால மலர், மழைக்கு எதிரே நின்றதுபோல நீரோடு நிறைந்த பெரிய அமர்ந்த குளிர்ந்த கண்களின் நீர் வடிகின்ற வருத்தம் தீர, அவர் வருவாரானால் நன்மையாகும். தோழி!

கேட்பாயாக: காய்கின்ற வெய்யில் நீரை வறட்டிய நீரில்லாத திசையில் அழல் பருகி உண்ட நிழலுடைய (நிழலில்லாத) பெரிய வழியிடத்துள்ள வறண்ட மரம் போல, உயர்விட்ட கொம்புடைய அழகிய கலைமான், நீர்போலத் தோன்றும் பேய்த்தேரை நீரென விரும்பி ஓடி வருந்துங் கொண்டு கழலும் உள்ளத்தோடு மேய் இன்றி பிணை மானைச் சுட்டிட்டழைக்கும். அது மெலிந்து அழைக்கின்ற அக்குரல் அரிய சுரத்தே செல்வோர்க்கு ஆவின் குரல்போற் கேட்கும். அழகிய அரையுடைய வேங்கைமரம் நிற்கும் பெரிய புனமுடைய குன்றிடத்து, ஆர்கின்ற பெரிய மூங்கில்கள் ஒலிக்கும் சிகரங்கள் காய்ந்த மலைச் சாரலிடத்திலுள்ள காட்டைக் கடந்தார். (காட்டைக் கடந்தார் இப் பொழுது வாரின் நன்று எனக்கூட்டுக.)

**எயினந்தை மகனார் இளங்கீரனார்.**

## 396 மருதம்

[இது. காதற் பரத்தை தலைமகற்குச் சொல்லியது.]

தொடர்புடைய எனது தலைவரே! செல்லாதிர். கொடியுடைய தேரும, பொன் பூவுடைய நன்னனது புன்னாட்டை அடக்கினதுபோல (அதனிலும் மேலாக) யாமோசை கேட்கும் வீதியுடைய பாழி ஊரிடத்திருந்து, அஞ்ச மாட்டேன் என்று கூறிய எயினன், போர் செய்யும் கல்வியில் தேர்ந்த ஞிமிலியைத் தாக்கித் தனது உயிரைக் கொடுத்தான். அவ்வாறு சொல்லளவில் நில்லாது தண்டிக்கின்ற அருசத்தக்க தெய்வத்தின் முன்னால் தோன்றி

மெலலிய இறையுடைய முன்கையைப் பற்றிச் சொல்லிய சொல்லைக் கடந்தாய்; உனது ஆசையுடைய நெஞ்சம் மென்மேலும் சிறக்க உனது மார்பைத் தராதனையாய் பிறன் ஆகினை. இனி யான் உன்னை விடுவேனல்லேன். **மந்தி** என்பவள் நீர் வடியும் கண்ணளாய்ப் பலவற்றைக் கூறிப் புலந்து உறைய, கடிய ஆடலிற் றிறமையுடைய, **அத்தியின்** ஆடும் அலங்காரத்தை விரும்பி நெடிய நீரையுடைய **காவிரி** அவனைக்கொண்டு சென்று ஒளித்ததைபபோல உனது மனைவி உன்னைக் கவர்ந்து கொள்வதையும் யான் அஞ்சுவேன். கோபித்த **ஆரியர்** அலறும்படி தாக்கிப் பெரிய புகழுடைய முதிய **இமயமலை வணங்கும்படி** வில்லைப் பொறித்துக் கொடிய சினமுடைய வேந்தரை மறியறபடுததிய சேரனது **வஞ்சி** நகர் போன்ற எமது நலனைத் தந்து செலவீராக.

—**பரணர்.**

## 397 பாலை

[இது, மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.]

எனது மகளது பெரிய இளமையை யான் பாராட்டவும், தாய் தனது தலைமையைக் கண்டு கடமைகளைச் செய்யவும், முழவு முழங்குதலில் ஓயாத விழாவுடைய பெரிய வீட்டில் மணத்தைக் கொள்ளான். பாறை வெடிக்கும்படி முகிற் கூட்டங்கள் ஒழிந்த காடு மயக்கந்தருகினற வழி எளிதாக, பெரிய பொறியும் வரியுமுடைய அல்குலுடைய மாயவளுக்காக, உயர்ந்த கொடி படரும் வெயில் தணிந்த பருவத்தே செல்லான்.

வேகமும் கொடிய வலியுமுடைய யானை அஞ்சும் படி குத்திப் போழ்ந்து புண்படுத்திய பொறிந்ததும் புண்பட்டதும் பொளியுடையதுமாகிய சிவந்த ஓமை யின் அரையைப் பார்த்து, ஊனென்று நினைத்துக், கரிய காலுடைய யாம மரத்தே பருந்து வந்திருக்கும். மிகவும் உயர்ந்து வளர்ந்த வானத்தை முட்டும் நெடிய சிகரத்தில், வெவ்விய கோடைக் காற்றுக்கு அசையும் சிறிய இலையுடைய மூங்கிலில் நெல் விளை கின்ற காட்டிடத்தே துன்பந் தரும்படி செல்லும்படி துணிந்தான் (மாயவளுக்காக வெயில் தணிந்த காலத்தே செல்லாது துன்பந் தரும்படி சென்றான் என்றவாறு.) —கயமனார்.

## 398 குறிஞ்சி

[இது, காமமிக்க கழிபடர் கிளவியால் வரைவிடத்துக் கண், தலைமகள், தலைமகனது வரையினின்றும் வந்த ஆற் றோடு புலந்து சொல்லியது.]

" ஆபரணங்களைத் தம் நிலையினின்றும் நெகிழும் படி செய்த வருத்தம் மிகத், துயர்மிகுந்த வருத்தத் தோடு பலவற்றை வெறுத்துக் கூறி இளைந்து, மெல் லிய தோள்கள் நெகிழும்படி சோர்ந்து, கொன்றை யின் மலர்ந்த மலரைப்போலப், பாழ்படும்படி முற்றிய பசலை நிறத்தை நோக்கி, நெற்றி பசப்பூர்ந்து இவ் வகையாயினேம். இவ்வாறாகிய எம்மை உம்மவன் அருளாது கொடுமை செய்தான். அக்கொடுமைக்கு இம்மென்று வருந்துகின்ற குளிர்ந்த கண்கள் தெ ளிந்த குளிர்ந்த நீர் நிறையும்படி, நற்குணம் மாறிச் செல்தல், உனது குன்றநாடனுக்கு என்ன ? என்று

கரைபுரண்டு வருகின்ற நீரையுடைய ஆறே! நீ கூறெனை உன்னோடு (ஆற்றோடு) யான் புலத்தலை அஞ்சி, அவர் மலையின், பல மலர்களால் மறைத்து மிகவும் நாணி ஒடுங்கி மறைந்து ஓடுகின்ற உன்னைச் செல்லவிட்டுத் தான அன்பறத் துறந்து உறைதல் வல்லவராயினர். பெரிய ஆண் புலி பொருதலிற் புண் மிகுந்து வருந்தும் பெண் யானையைத் தழுவிய வலி யழிந்த ஆண் யானை ; வனைந்த (மூங்கில்கள் உரைஞ்சுவது போல) ஒலிக்கும அருவி உயர்ந்த மலை நாட்டினின்றும வருகின்ற ஆறே! அயலவரைப் போல என்னைப் பாராது, அழலபோன்ற பூங்கிளைகளையுடைய வேங்கைமரத்தின் நிழல் விளங்கி அசைந்து மாரியைப்போல குளிர் செய்ய நந்தி ஆரியரது பொன் புதைத்து வைத்த நெடிய மலைபோன்ற எனது தந்தையின் பூஞ்சோலையிடத்திற் றங்கி இன்று இவளைச் சேர்ந்து செல்லின் அவருக்குக் கெட்டுப்போவது ஒன்று உண்டோ.

—இம்மென்கீரனர்

## 399 பாலை

[இது, தலைமகன் பிரிவின்கண் தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.]

மலையிடத்திற பிறந்த சாநதை அணிந்து இருண்டு, இமயமலையிலுள்ள நந்தவனம்போல நாறும் கூந்தலும், நல்ல நெற்றியுமுடையவளது இன்பந்தருகின்ற மார்பை (விடாய்கருப்) பருகுதல் போன்ற காதலுடைய உள்ளத்தோடு காதலர்

புரிந்த பல நல்வினையினுலாகும். அந்நல் வினையினுல் தலைவர் வரித்தற்குத் தேர் ஊர்ந்துவந்தார். அத் தேரில் பூட்டிய குதிரை, பரி நூலிற் சொல்லிய இலககணங்களமைய நீலமான கீழ்வயிறும், மயிர் கொய்த கழுத்துமுடையதாயிருந்தது; சொர சொரப் புடையதாய் நீண்டு, நெய் முனையிலே யுடைய கொழு விய சோறறை நேரே வைதது ஒட்டியது போன்ற செந்தினைக் கதிர்போல வளைந்த தலையுடையது. அதன அழகிய திரண்ட கழுத்துடன் நுகம் பொருந் தவும் பல பூப்போன்ற பொறிகளுடைய பல உடை கள் பொலியும் அது தேரிற் பூட்டப்பட்டது. அதை சாரதித் தொழிலில் வல்ல பாகன ஓட்டலின் குதிரை யிழுக்கும் தேர் துறையிடத்து நீர் பாய்வது போன்றிருந்தது. வலிய காலையுடைய அழகிய குதிரை அமபு போவதுபோ லிருந்தது. அது பாலைப்போன்ற குளிர்ந்த மணலிடத்தே வாய்க்கால் இருப்பதுபோன்ற பாதையிடத்தே சென்றது; நுண்ணிய மணற் சேறுடைய பரப்புடைய இருண்ட நீண்ட சுரத்தைக் கடந்தது. இவ்வாறு தலைவன் வந்தான். அப்பொழுது பூக்கள் மிகுந்த கரிய கழியிடத்தே இலையோடு அசையும் ஆழ்ந்த நீரிடத்தே நிற்கும வட்டமான நெய்தற் பூவின் முற் ருத தேன் நாறப், பல மலர்கள் அலர்வதைக் கண்டு, புதிய பழைய வலியோடு பெரிய ஓசையைச் செய்யும் கடலையும் உயர்ந்த பனையையும் உடைய நமது ஆர வாரமுடைய ஊரவர்கள் இது புதிய அழகுடைய தாயிருக்கின்ற தென்பர். (இக் கலியாணத்தைக் கண்டு இது புதியதாயிருக்கின்ற தென்பர். இது

மிகவும நகைககத்தககதாகும். முனனமே கூட்ட முண்மையை இவர்கள் அறியார் என்றவாறு.)

—உலோச்சனர்.

அக நானூறு வசனம்

முற்றும்

---

## பாயிரம்.

நீதியின் வழி நின்றவனும், உலகை வென்றவனும், பழுதிலலாத கோட்பாட்டையுடையவனுமாவன் பாண்டியன். அவனது சபையிலே அறிவுடைய மனமும், வானத்தை முட்டும் நல்ல புகழும் உடையவராகிய புலவர்கள் கூடி அரிய மூவகைத் தமிழையும் ஆராய்ந்தார்கள். அப்பொழுது அவர்கள் ஆய்ந்த இனிய தமிழ்ப்பாட்டுகளுள் நெடியவாகி அடி பரந்து சென்ற, இன்பப் பகுதியாகிய இனிய (அகப்) பொருட பாடல் நானூறை எடுத்தனர். எடுத்து, நூலைப் படித்த புவலர்களுக்குக் களிப்பைத் தரும் மும் மதமுடைய களிற்றி யானை நிரை, மணிமிடை வளம், நித்திலக் கோவை என்று மூன்று வகையாகத் தொகுத்தார்கள். இவ்வாறு தொகுக்கப்பட்ட நல்ல நெடுந் தொகைக்குக் கருத்தென்று குணமுடையோர் உரைத்தவற்றை ஆராயின் (ஒன்றுளது). அவ்வுரை, அப்பாட்டின் தன்மைக்கு, ஏற்றது மாத்திரமல்லாமல் பாட்டின் தன்மையை நோக்கி, குற்றமில்லாமல் பாட்டோடு பொருந்தத் தகுதியோடு சிறந்த அகவற்பாட்டாலும் செய்யப்பட்டதாகும். அதனைக் கருத்து இனிது விளங்குமாறு செய்தார்

யாரோவெனில் ; குதிரை பூட்டிய தேரையுடைய சோழர் ஆள்கின்ற செழித்த நாட்டுள்ளும் நாடு என்று சொல்லுமாறு சிறந்த பெரிய சிறப்புடையதும் செல்வம் குன்றாததுமாகிய **இடையளநாட்டிலே**, தீமையில்லாத ஒழுக்கமுடைய பழைய ஊர்களுள்ளும், ஊரெனச் சிறப்புப் பொருந்திய **மணக்குடியிலே**, பெருமை நிறைந்த **தேவன்** என்னும் பழமை பொருந்தியவனாவன்.

The Royal Printing Works, Mount Road, Madras.

**K. SUBRAMANIA PILLAI, M.A., M.L.,**
ADVOCATE
*Tagore Professor of Law (1920)*
(Professor of Tamil
ANNAMALAI UNIVERSITY)

16, RANGANATHA STREET,
T. N. MADRAS.

*Dated, 16-5-'40*

யாழ்ப்பாணத்து நவாலியூர்ப் பெரும் புலவராகிய திருவாளர் ந. சி. கந்தையா பிள்ளை அவர்கள் இயற்றிய தமிழர் சரித்திரம் என்னும் நூலானது மக்கள் தோற்றத்தைப் பற்றிய தொன்னூல்கள் பலவற்றின் ஆராய்ச்சிப் பயனாகவும் எகுப்தியர், சுமேரியர், பழைய சிந்து நாட்டினர், முதலிய பண்டை நாகரிக மக்களின் வரலாற்றினைப் பண்டைத் தமிழர் வரலாற்றினோடு ஒப்பிட்டு ஆய்ந்ததின் பயனாகவும் அமைந்துள்ளது கண்டு பெருமகிழ்வடைந்தேன். இந்நூல் எளிய தமிழ் நடையில் தக்க முறையில் எழுதப்பட்டுள்ளது. ஐவகை நிலமக்கள், நால்வகை மரபினர், சங்க நூற்றெய்வங்கள், பண்டைத்தொழில வகைகள், தமிழர் ஆரியர் கலப்பு என்பவற்றைப் பற்றிய அரிய கருத்துக்கள் கற்பாருக்குப் புத்தறிவு பயப்பன.

இவ்வாசிரியரது தமிழகம் என்னுஞ் சிறந்த நூலானது நில நூலாராய்ச்சி, மொழி நூலாராய்ச்சி, தமிழ் இலக்கண இலக்கிய ஆராய்ச்சி என்பவற்றின் பெரும் பயனாகிய அரிய கருத்துக்கள் நிறைந்துள்ளது. பண்டைத் தமிழரின் பழக்க வழக்கங்கள், வீரம், காதல், கற்பு, சமுதாயப் பிரிவுகள், போர், கலை, மூலநூல் முதலியவற்றின் விவரங்களும் சங்க இலக்கியம், பிற பெருங் காப்பியங்கள் முதலியவற்றின் சாரங்களும் இதனுள் இனிது விளக்கப்பட்டுள்ளன. தமிழரையும் தமிழகத்தையும் பற்றி இன்றியமையாது அறிய வேண்டியவை யாவும் இந்நூலுட் காணப்படும். தமிழ் வாணருக்கு இது ஒரு நல்ல அறிவு விருந்தாய்த் திகழ்வதால் தமிழுலகம் இவ்வாசிரியருக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறது.

கா. சுப்பிரமணிய பிள்ளை.